அவர்கள்

அன்பளிப்பு



கணபதிதுணை.

# கச்சிக்கலம்பகம்.



இரண்டாம்பதிப்பு.

ஸ்ரீ ண் டி

அரங்கநாதமுதலியாரால்

இயற்றப்பட்டது.

சென்னபுரி:
ஊ-புஷ்பரதசெட்டியாரவர்களது
கலாரத்நாகர அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

1890.

உ

கணபதி துணை.

# கச்சிக் கலம்பகம்.

## காப்பு.

### நேரிசை வெண்பா.

தூங்கச் சிலையேடுந் தந்தவெழுத் தாணியுங்கொள்
துங்கக் கரிமுகத்துத் தூயவனென் - சங்கையொழித்
தேடெழுத் தாணி யெடுத்தறியே னிந்நூலைப்
பாடவளிப் பானற் பதம்.

## நால்வர் துதி.

### ஆசிரியவிருத்தம்.

தறையின்மிசைத் தமிழ்பெருகச் சைவநெறி தழைப்பவவ
தரித்த சால்பின்
மறையுறைவா மொருநால்வர் பதமலரைச் சிரங்கொண்டு
மடத்தைப் போக்கிக்
குறைவறுநாற் றோற்றத்தி னுளதாய துயரகலக்
குறிப்ப னன்றோ
பிறைசுமந்த சடையானொன் பிழைசுமந்த கலம்பகத்தைப்
பெறச்செய் வாரே.

## ஒருபோகு மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா.

### இது தரவு.

பூமேவு நான்முகனும் புயங்கவணை மாதவனு
மாமேவு நினதுமுடி மலரடிகா ணத்திறத்தை
ஆராயு மறிவினரோ யம்பலக்கூத் தாட்டினையும்
வாரார்ந்த தனத்துமையாண் மகிழ்ந்துறையு மாட்டினையுங்
கழையிழைத்த வில்லானின் கண்ணினுறு கேட்டினையும்
பிழையிழைத்த முப்புரத்தார் பீடழிந்த பாட்டினையும்
அறமேய மால்விடையா யம்புதமா யம்பாகித்
திறமேய தேவியுமாய்ச் சேர்ந்தவருங் கூட்டினையுங்

கல்லடித்தார் சிலையடித்தார் கண்பறித்தார் முதலடியார்
தொல்லுலகில் பிறவாமே துயரறுத்த பீட்டினையும்
பாற்கடலி னமுதெழுமுன் பகைத்தெழுந்த வாலத்திற்
கேற்கவிட மமைத்தமரர்க் கின்புறச்செ யூட்டினையும்
கிழக்குவடக் கறியாத கீழ்மையருஞ் சிறப்பெய்தி
வழக்குமிடப் புரியுணர்வு வாய்ப்பளித்த நீட்டினையு
மறிபவரா மன்றியெம்போ லறிவற்ற சிறியவர்வீ
டுறுவகைமற் றில்லையென வுணர்ந்தெளிது காட்சிதரீஇ
மாகம்பத் தொடுமிறைஞ்சி வழிபாடு செயவுமையோ
டேகம்பத் தொருமாவி னினிதுவீற் றிருந்தருள்வோய்!

## ஈரடித்தாழிசைகள் - அ.

இடங்கர்வாய்ப் பட்டகளிற் றின்னுயிரைப் புரந்தசெயல்
கடல்வீழ்த்த நாவரையன் கன்மிதத்தற் கொப்பாமோ (க)

கைகைக்குக் கானடந்த காகுத்தன் பொறையினுநீ
வைகைக்கு மண்சுமந்த வண்மைமிகப் பெரிதன்றோ (உ)

கம்பத்த னுயிராமாயக் கடுஞ்சமர்செய் கைவலியென்
கம்பத்தன் சிலையெடுக்கத் தலைநெரித்த கால்வலிக்கே (ங)

கொம்பனையாள் கல்லுருவிட் டின்னுருவங் கொண்டதினுஞ்
சம்பந்த னென்பைப்பெண் ணாக்கியது சால்புடைத்தே (ச)

அம்பொன்றாற் புணரிநீர் சுவறச்செ யாற்றலினும்
நம்பொன்றாப் புரமூன்றை நகைத்தழித்தன் மேன்மையதே (ரு)

எழுவிடையைத் தழுவிமண மெய்துமொரு செயலினுஞ்சீர்
மொழியரைய னமணாகரி முனிவொழித்த தற்புதமே (சு)

அண்டரிள மடவாரை யணைந்தவபி ராமமெனோ
பண்டிருடி மனைவியர்கள் பாடழிந்த வனப்பினுக்கே (எ)

பற்குனற்கு மாயன்சு பத்திரையைத் தந்துவகை
சற்குணற்குப் பரவைதரு தண்ணளிக்கு நேராமோ (அ)

## அராகம் - சு.

உரையிட வரியதொ ரனலுரு வொளிதர
வரைமக ளிடமுறு வகைபுரி யளியினை (க)

நிழலிடு தருவடி நிலைபெறு கருணையை
வழிபடு மவர்பெற வருள்பர வெளியினை (உ)

பகலவ னனலவ னிறைமதி பரிவுறு
தகவமை யுரைமிகு தமனிய வொளியினை (ங)

பழமறை யொலிகெழு பலதல மருள்பய

# கச்சிக்கலம்பகம்.

' பெயர்த்தும்வந்த

## ஈரடித்தாழிசைகள் - அ.

நறைபூத்த மலர்க்கொன்றை நளினத்தின் மாண்டதுவே
பிறைபூத்த செஞ்சடையாய் பிறங்குபுய முற்றபினே (க)

பணியணிந்தாய் மற்றதைவிற பற்றியிசைத் தாய்கயிருத்
திணியவைத்தாய் மந்தரத்தே நஞ்சுணவுஞ் சிறப்பாமோ (உ)

மாலுலகங் காக்கநர மடங்கலுருக் கொளவம்மா
லாலுலகுக் கானதுய ரகற்றவலார் வேறுளரோ (ந)

மகிழிருந்தாய் மனையென்ற மாசுணமேற் றுயின்றுனுக்
ககங்கனியச் சங்காழி யாண்டகைமுன் னருளியதே (ச)

கவுணியருக் கணிமுத்தங் காதலினீந் தருள்செயலக்
கவுணியருக் கணிமுத்தங் கனிந்திட்ட பரிசன்றே (ரு)

மதிவேணி மிசைமேவ மலர்விழியு மதியான
விதிசாறற வறியேமுன் மேனியழ கியம்புவதே (சு)

முலைக்குறியும் வளைக்குறியுங் கொண்டதற்பின் முதலவனே
இலைக்குறியுங் குணமுமென லெவ்வண்ண மியைந்திடுமே (எ)

மாவடிக்கீ முறமுயன் மலரடிக்கே மங்கலச்சொற்
பாவடுக்க நாவளிப்பாய் பழமறைசொல் பரமேட்டி (அ)

## நாற்சீரோடியம்போதரங்கம் - உ.

கரந்தயங் கனன்மழு வேந்தி நெற்றியிற்
புரந்தெறு சுடாக்கணும் பூண்ட மேன்மையை (க)

கூற்றினைக் குமைத்திடு கோலத் தாளினை
யாற்றினை யருணடமாடும் பான்மையை. (உ)

## நாற்சீரோரடி யம்போதரங்கம் - ச.

ஏரேழ் புவனம் பரிந்து ணேற்றினை (க)
காருா சடையிற் கரக்கு மாற்றினை (உ)
பாரரா பெரியோர் பணியுஞ் சாற்றினை (ந)
தேரா தெளிவறு செருக்கை மாற்றினை. (ச)

## முச்சீரோரடி யம்போதரங்கம் - அ.

புரமெரி படநகை கொண்டனை (க)
புரிதவ மழிவகை கண்டனை (உ)
புரையறு தசைமிசை யுண்டனை (ந)
புணாவுற வருமறை விண்டனை (ச)
மணிமிட றுர்தரு மிருளினை ' (ரு)
மலைவளர் காதலி மருளினை (சு)
மறையொளிர் தோமறு பொருளினை (எ)
மகிழொடு மாவம ரருளினை. (அ)

### இருசீரோரடி யம்போதரங்கம் - கசு.

| | | | |
|---|---|---|---|
| சடையுறு செல்வினை | (க) | அமுதுகு பாவினை | (௯) |
| விடையுறு மெல்லினை | (உ) | அனலுறு கோவினை | (க0) |
| கலையளி சொல்லினை | (௩) | சிலையில வாவினை | (கக) |
| சிலைவளை வில்லினை | (௪) | தலைநதி மேவினை | (கஉ) |
| மலைவலி புல்லினை | (௫) | மறைபடு நாவினை | (க௩) |
| வழிபெறு மல்லினை | (௬) | உலகுணு மேவினை | (க௪) |
| களமில கல்லினை | (எ) | கரிவளர் காவினை | (க௫) |
| பரவெளி யில்லினை | (அ) | கதிதரு மாவினை | (க௬) |

**தனிச்சொல்.** எனவாங்கு.

### நேரிசையாசிரியச் சுரிதகம்.

ஆரண வகில காரண பூரண
நாரண னறியா நாயக வேயக
முத்தே யறத்தின் வித்தே முக்கட்
சித்தே சத்தே யெத்தே வரும்பணி
அத்தா வன்று யளிக்கொரு வைப்பே
கத்தா வெனக்கூய்க் கண்ணீர் ததும்ப
உள்ளநெக் குருக வுரோமஞ் சிலிர்ப்ப
விள்ளற் கருநின் மேன்மையைப் புகழும்
பாவலர் தமக்குப் பழவது கூல
மேவலர் வேரற வீறிய சீல
மாதுமை பங்குறு மாண்புடைச் சீரிய
தீதெமை யணுகாத் திறமரு ளாரிய
நால்வ ரிசைத்தமிழ் நலனறி நாத
மால்வளை மங்கை மணாள நீத
கொன்றைத் தொடையணி கோனே பசுபதி
குன்றைக் குழைத்த கோதறு குணநிதி
கல்லாப் புல்லேன் கனிவறு மனத்தேன்
எல்லாப் பிழையு மியற்று மேழையாற்
சொல்லப் படுமோ சொலற்கரு நின்புகழ்
புல்லப் படுமோ புரையறு நின்பதம்
உன்னப் படுமோ உத்தம நின்னெழில்
பன்னப் படுமோ பகவ நின்னருள்
பாடப் படுமோ பண்ணவ நின்சீர்
தேடப் படுமோ சேவடி யெனினும்
அல்லுறு நஞ்சர வக்கு மத்தமும்
புல்லு முவப்புடன் புனைந்தெனக் கனிந்து
சிற்றறி வினனுனை செய்யுளை
முற்று மேற்பாய் மூவர்க் கையனே. (க)

## நேரிசை வெண்பா.

ஐய முறுமனமே யண்ணறிருக் கச்சியரன்
செய்ய மலரடியைச் சிந்தித்தி - நையாமே
இன்மையறி யாவீகை யெச்சமறி யாவாய்மை
புன்மையறி யாப்பொறையைப் பூண். (௨)

## கட்டளைக்கலித்துறை.

பூண்ட வரவ மதியை யுணுது புரந்தருளு
மாண்ட வரவம் புரிவார் செயலை யழித்துவக்குந்
தாண்ட வரவ ரிணையடித் தாமரை தஞ்சமென
வேண்ட வரமளிப் பார்கச்சி யன்பர்க்கு மெய்யரனே. (௩)

## புயவகுப்பு.

### இரட்டை ஆசிரியச்சந்தவிருத்தம்.

தனதனன தந்தனத் தனதனன தந்தனத்
தனதனன தந்தனத் தனதான தந்தன.

௧. அரணெரிய வந்தரத் தமரர்துயர் சிந்தவெற்
பிணையொருது ரும்பெனச் சிலைகோலி விஞ்சின
அரவமரி கந்துசெக் கரினிலகு செஞ்சடைப்
பனிமதிய நண்புறப் புரியாம கிழ்ந்தன
அகிலபுவ னங்களுக் கமுதிடுகி ரந்தரிக்
கிடமமாவ ரங்கொடுத் தகலாத ணைந்தன
அழலுருவ மன்றுபெற் றொருபுறவ மைந்தனுக்
கொளிவடிவு தந்தருட் பொலிவானி மிர்ந்தன

௨. கரடமத கும்பமத் தககபட தந்தியைச்
சமர்பொருது வென்றுரித் ததளாடை கொண்டன
கடலமுதை யும்பருக் குதவவெழில் கந்தரத்
திலகுகறை கொண்டுதிக் கிருநால ளந்தன
களபமணி யம்பிகைக் கனகதன மின்புறத்
தழுவிவரு மங்கலச் சுவடால்வி ளங்கின
கதிர்மதிய மங்கிமுக் கணிறெளித யங்கிடக்
கடுவுடைய திண்சினத் தரவாட நின்றன

௩. சரமழைபொ ழிந்தபற் குனனருள்பொ ருந்திடப்
பகைவர்கெடு வன்படைக் கொடையாலு வந்தன
சமரபுரி கந்தனைப் புலவருய மண்டமர்த்
திறலவுணர் பங்கமுற் றிடுமாறு தந்தன
சததளம லர்ந்தபொற் றவிசினிலி ருந்தவச்
சதுமுகன்ம றங்கெடத் தலையோட ணிந்தன
சலமிசைது யின்றசக் கரதான லம்பெறத்
தருமவிடை யம்புறப் பரிவோடி ணங்கின

௪. இரவினவிர் திங்களிற் செலுமொளிபெ றுங்குழைக்
கவுரியிட மன்பினுற் றிடவாசை மிஞ்சின
இரணியனு ரங்தொலைத் தெழுநரம டங்கலைச்
சரபவுரு வந்தரித் தமராடி வென்றன
இடபமிசை வந்துபொற் பதநசைகொ ளன்பருக்
குயர்பதவி தந்திசைப் பருமோகை கொண்டன
இனிமைதரு கம்பமுற் றருளநக வெந்தைநித்
தியநிமல சுந்தரப் பரனூர்பு யங்களே. (௪)

## ஆசிரியவிருத்தம்.

புயங்கப் பணியார் புவியுண்ட புனித விடையார் புனையின்மதி
தயங்கப் பணியார் சடையாளர் தயையின் சாலே தனைநிகர்வார்
இயங்கப் பணியார் புரமெரித்த வீசா கச்சி யிடையமர்ந்தார்
மயங்கப் பணியா ரவர்திருத்தாள் வணங்கி ரிடும்பை வற்றிடவே. (௫)

## அம்மானை. கலித்தாழிசை.

வற்று வளக்காஞ்சி வாழ்ந்தருளே காம்பரனூர்
செற்றூர் புரமெரித்த தீயர்கா ணம்மானை
செற்றூர் புரமெரித்த தீயரோ யாமாயிற்
கற்றூர்க ளந்தணராக் கழறுவதே னம்மானை
கழற லறுதொழில்சேர் காரணத்தா லம்மானை. (௬)

## நேரிசைவெண்பா.

அம்மானைக் கையமைத்தா னக்காளை யோடவைத்தான்
சும்மா விருந்துமதற் சுட்டெரித்தான்—பெம்மான்
பதிக்கச்சி மேய பரமன் பணிந்து
துதிக்கத் தருவன் சுகம். (௭)

## கட்டளைக்கலித்துறை.

சுகந்தரு கச்சிப் பதிவந் தடியர் துயர்களைவோர்
நகந்தரு மெல்லியற் காம விழியிரு நாழிநெல்லா
லுகந்தரு முப்பத் திரண்டற மோம்பச்செ யுத்தமர்பா
தகந்தரு துன்பொழிப் பார்பணி வீரவர் தாண்மலரே. (௮)

## ஆசிரியவிருத்தம்.

மலர்க்கஞ்சன் சிரமிழந்தான் கோப்புரக்க மலையெடுத்தான்
வன்றி யானுன்
சிலைக்கரும்பா னுருவழிந்தான் சேணியங்கு மிருகதிருஞ்
சிதைந்து நொந்த
கலக்கரிய பகைப்புரங்க ணீறுபட்ட கச்சியே
கம்பர் மேன்மை
நிலைப்படவா யாமையினன் ஞேமனமே புகழ்ந்தடைதி
நிமல வாழ்வே. (௯)

## வலைச்சியார்.

### இரட்டையாசிரியவிருத்தம்.

வாளைக் கயலை நிகர்த்தவெங்கண்
வலைச்சி யீர்நும் வனப்பெவரான்
மதிக்க வமையு மரன்கச்சி
வந்தீ ரளவா மயறந்தீர்
தோளைத் தழுவிற் சுகம்பெறலா
மூட லொழிவீ ரீர்க்குமிழி
சுழிதேம் புளினந் தோன்றிடுமால்
துயர முறுவே னடைகிழங்கா
ஞளைக் கழியா திருலிதழி
னறவைப் பருக நச்சுறக்கொ
ணைக் கருப்பஞ் சிலைவேளை
நாணச் செய்வேன் மலங்குறேன்
கோளைப் போக்கற் குறவைமட
வைப்பா மகத்தைக் குழைத்தென்மேற்
கொள்வீ ரிரதத் தென்காலான்
கொடிய பகழிக் குடையேனே. (௧0)

### கலிநிலைத்துறை.

ஏனங் கொன்று ரேனக் குருளைக ளிடர்தீர்த்தார்
மானங் கொன்றை வலன்வைத் துமைமா னிடம்வைத்தார்
தானங் குறைவார் தானத் துறையார் தமிழ்வல்லார்
கானத் துறவார் கம்பத் திடையே மகிழ்வாரே. (௧௧)

### ஆசிரியச்சந்தத்தாழிசை.

மகிழார மாவாளை மணமேவ விழைவாய்
மணியார மரவேயின் மலைபச்சை யுடையே
இகழ்மிம மிசைபாடி நடமாடு மிடமா
மிகவாத தொழிலைய மில்வாழ்வொர் மலையின்
மகவாய வொருநீலி மறைவுற்ற சலத்தாள்
வரமைந்த னொருமாதின் வழிநின்ற திருடன்
தகவீது தெரியாத லொழிவாயென் னுளைகேள்
தனாமீதெந் நலமெய்தி மகிழ்வாய்மின் னரசே. (௧௨)

### விருத்தம். மடக்கு.

அரசுக விதையாரும் .. ... பரசுக விதையாரும்
அடையமை மாணும் .. புடையமை மாணும்
வரமா சடையாரு .. .. முரமா சடையாரும்
வயமா திரத்தாரும் ... .. ... புயமா திரத்தாரும்
கரமணி வடத்தாருஞ் .. .. சிரமணி வடத்தாரும்

களிமறைப் பரியாரு ... மொளிமறைப் பரியாரும்
அரிபதி யானுருங் ... ... ... கிரிபதி யானுரும்
அடியார் மாவாருங் ... ... கடியார் மாவாரோ. (கங)

## இரட்டையாசிரியவிருத்தம்.

மாதுமையாள் பனிமலையில் வளர்ந்தாணின் மதலையரிற் கயமு கத்தோன்
வரமுனிவன் வேண்டவட வரையேட்டிற் பாரதப்போர் வரைந்தா னீயப்
போதலங்க லணிகுமரன் குன்றுதொறும் பேருவகை பூப்ப மேவிப்
புனிதவிளை யாட்டயர்ந்தான் கச்சியமர் புண்ணியநீ கயிலை மேரு
மாதிரத்தே வதிந்தனையென் கல்லனைய மனத்தூடுன் குடும்பத் தோடு
மருவவொரு தடையுமில மலைசிலையா வளைத்தநினக் கெளிதே யென்றன்
கோதுடைய மனச்சிலையைக் குழைத்தன்பி னெகிழ்வித்த லைய மூன்னாட்
குருகுய்ய வுபதேசங் கூறியநீ யெனக்குரைத்தாற் குறைமட் டாமே. (கச)

## கட்டளைக்கலித்துறை.

மட்டிக்குட் டங்குங் கணுகிகர் கஞ்ச மலரனைய
தட்டிக்குட் டங்கை முருகனத் தாகச்சிச் சங்கரனே
பெட்டிக்குட் டம்பண மிட்டுவைப் பார்குணம் பெட்டுவினை
கட்டிக்குட் டன்றுய வொல்லா மகன்றிடக் கன்டருளே. (கரு)

## வெண்பா.

கண்டவளை மேவிக் கலந்துண்ட கள்வனெலி
கொண்டவளை நீர்க்கச்சிக் கோமானே—பண்டுனது
தாளை மருவுந் தகைமையிலா னுற்றதெவன்
தோளை மருவுஞ் சுகம். (கசு)

## தூது-கிளி.

## ஆசிரியவிருத்தம்.

சுகமே மறைமா வடிமே வியவென்
றுணைவற் கெளியேன் றுயரைப் பகர்வாய்
மகமே ருசிலைக் குனிவா னலனென்
மதனன் கழையே வையம் புகைக்குஞ்
சகமே ழயின்றேன் பெயர்கொள் ளெளியேன்
சரணு கதிசேர் தலைவேண் டினனென்
றகமே குழையப் புரிவா யெனில்யா
னயர்தீ தகலத் தருவாய் சுகமே. (கஎ)

## கலிநிலைத்துறை.

தீதறு நூலுணர் தெள்ளிய சிந்தையர் மனமூடே
காதலின் வாழே காம்பரர் முடியைக் காணவய
னேத முறக்கோ வெகின மெனப்போய் முடிகாணு
வேதனை பெற்றுே வேதனை யுற்றுள் வெளியானுள். (கஅ)

### ஆசிரியவிருத்தம்.

வெளிவீட் டானைக் காட்டானை
 வியன்மா வானைச் சேவானை
ஒளிவிட் டோங்குங் கச்சியனை
 யுயர்மா மறையி னுச்சியனைக்
களியுற் றுடுங் கூத்தானை
 யகில மனைத்துங் காத்தானை
அளியுற் றினிது புணர்ந்திடுதற்
 கநங்கன் செயலொன் றிலேமானே. (௧௯)

### இரங்கல். ஆசிரியவிருத்தம்.

மாமையை யடைந்தாய் வானக முற்றாய்
 மழைக்கணீ ருகுத்திடப் பெற்றாய்
காமுற வணஞ்சேர விவ்வளை விட்டாய்
 கலைமதி யொளித்தலைப் பெட்டாய்
நாமுற விடிக்க மின்னிடை யானாய்
 நள்ளிரு ளம்பரம் போனாய்
ஏமுறு மென்போற் கொண்டலே கச்சி
 யீசனை விழைந்தனை சிறப்பே. (௨௦)

### மடக்கு. விருத்தம்.

சிறுகாலின் மணமளவுந் . .. திருக்காஞ்சி யுள்ளீர்
சேயிழையாட் ககலுமிடைத் .. திருக்காஞ்சி யுள்ளீர்
மறியோடு மழுவிடமா மாசுணந்துன் புடையீர்
மங்கையணிந் திடுமுத்தம் . மாசுணந்துன் புடையீர்
வெறிதாசை கூடன்மணத் . . துறவாலங் காட்டீர்
விதிவிழைவு கண்டவிடத் ... .. துறவாலங் காட்டீர்
அறிவேலுஞ் செயலிட்டீ . . ரம்பரங்கா வணமே
அளிப்பீரங் கொன்றைமல . ரம்பரங்கா வணமே. (௨௧)

### ஆசிரியவிருத்தம்.

காரானைத் தோலுரித்த கறுப்பி னானைக்
 களித்துடல நீறணிந்த வெண்மை யானை
வாரானை யூர்ந்திலங்கு செம்மை யானை
 வலத்தானை யிடப்பாகப் பச்சை யானை
நீரானைச் செஞ்சடையி னெறறி யுறற
 நெருப்பானைப் பொருப்பானைச் சகத்தி ரச்சீரப்
பேரானைப் பெரியானைக் கம்பத் தானைப்
 பெம்மானை யெம்மானைப் பேசு மாறே. (௨௨)

### கலிவிருத்தம்.

மாறி யாடு மலரடி மாமறை
கூற வாடுங் குவலயத் தின்னறந்

தேற வாடுந் தெளிதமிழ்க் கச்சியின்
பூற வாடு முளமகிழ் பொங்கவே. (உ௩)

### கைக்கிளை - மருட்பா.

பொங்கு மருணயனப் பூவி னிதழ்குவியு
மிங்கு மலர்க் கோதை யிதழ்வாடு—மங்குறவழ்
மாடக் கச்சியில் வாழுமெம் பெருமான்
குறையா வளக்கழுக் குன்றி
லுறைவா ளிவள்பூ வுதித்தது யவளே. (உ௪)

### மறம் - ஆசிரியவிருத்தம்.

தூதுவந்த தொழிலிலாத வாவழக்கை யறிதியோ
தொல்லைநந்த மரபினோர்கொ டுந்தரக்கு வாரணம்
பூதலத்தி னிலையெனக்க லைவிழைத்த சிலையரோ
பொன்றிணிந்த கொங்கைமான்ம கட்குறத்தி வள்ளிமுன்
போதகத்தை யேவியந்த மாதகத்தை யச்சுறப்
புரிந்தசெய்கை சாலுநுங்கு லம்புலப்ப டுத்திடச்
சூதவாழ்க்கை யார்துடிப்பி னுகம்வைத்த வான்மையார்
சொன்மறைக்க வாயதாங்கொ ளேற்புணர்ந்தி சைத்ததே. (உ௫)

### கட்டளைக்கலித்துறை.

இசையா ரணத்தின் முடியாா திருக்கச்சி யீசரன்பிற்
பசையா ரணங்கொரு பங்குடை யாரரி பங்கயத்தன்
மிசையா ரணங்கொழித் தோருள மேவிய மெய்யருத்தி
நசையா ரணங்குறு நானவா நற்பத நாடுவதே. (உ௬)

### ஆசிரியவிருத்தம்.

நாடுந் தொண்டர் மகிழ்வெய்த நறுமா நீழ லமர்ந்தானைப்
பாடும் பணியே பணியாகப் படைத்தேன் பழைய வினைதுடைத்தேன்
ஓடுந் துடியுங் கரத்தமைத்தோ னேங்கா ரத்தி னுட்பொருளைத்
தேடுந் திறத்தோர்க் கறிவித்தோன் றேவி யுமையாள் காதலனே. (உ௭)

### ஒருபொருண்மேல்
### மூன்றடுக்கிவந்தஆசிரியத்தாழிசை.

௧. காதங் கமழுங் கடியாரு மாந்தருக்கீழ்
நாத னருளாள னண்ணியசீர்ச் செவ்வி
காதிற் பண்ணுருங் கவியின்ப மானுமே.

௨. பூவின் மணமார் புனிதநறு மாந்தருக்கீழ்ச்
சேவின் மிசைத்திகழுந் தேசனமை செவ்வி
நாவின் னமுதூறு நற்சுவையை மானுமே.

ந. மண்ணிற் சிறந்த வளமளிக்கு மாந்தருக்கீழ்
விண்ணிற் பொலிந்தான் விளங்கியுறு செவ்வி
கண்ணிணையாற் காண்பரிய காட்சியினை மானுமே. (உஅ)

வெளிவிருத்தம்.

மாக்கைக் குருகின் றழும்புற் ருரு மாவாரோ
ஆக்கைக் கயனை யமைத்திட் டாரு மாவாரோ
காக்கைக் கரியைக் கனிவித் தாரு மாவாரோ
போக்கைக் கனலைப் பொலிவித் தாரு மாவாரோ. (உகூ)

களி - கட்டளைக்கலிப்பா.

மாவி னீழல் வதிந்தருள் வாகச்சி
வாழு மின்ப மருவு களியரோந்
தேவ ரன்று சிதைந்தவ ரோமது
வாவி சீதர னுன்ன மயங்குறின்
நாவ லாந்துமெய் பேசுவ ரின்னறை
யுண்ட நன்மையர் நறபனை தெங்குசேர்
காவி டைப்பாடி யாடுவா மண்டரு
கண்ணி றைந்த வமுதை யருந்தவே. (௩0)

இதுவுமது. ஆசிரியவிருத்தம்.

அரவிந்த மலரின்கட் குடியனைய னமரராசுரா பானத் தாரோ
வரமுறுகா விரிநதிக்கட் குடியனே திருமருவு மார்பி னுனுந்
தரணியின்கட் குடியர்பெருந் தவமுனிவர் சித்தரும்விண் ணவர்கடாமுங்
கரவடமேன் றிருக்கச்சிக் கண்ணுதலார் பனையின்கட் குடியர் தாரோ. (௩க)

கட்டளைக்கலிப்பா.

கட்ட தும்புமி தழித்தெ ரியலைக்
கச்சி நாதா தருவ திலையெனிற
றுட்ட மன்மத னங்கணை யாமணச்
சூத முல்லைய சோகம ரவிந்தங்
கெட்ட வுற்பல மஞ்சேரி போல்வருங்
கிளிய னீர்மட நாணமச் சம்பயிரப்
புட்ட யங்குயி லாந்தும வைக்கினா
யோவென் றுரிரச் செம்மழு வாளர்க்கே. (௩உ)

ஆசிரியவிருத்தம்.

மழுவேந்து வலக்கரத்தர் மழையேந்து சடைச்சிரத்தர் வான்பு ரத்தா
விழவாங்கு பூதரத்தா வேளெரித்த மாவுரத்த ராத ரத்தா
தொழவாழு மாதிரத்தா கடமாடு மெரிசுரத்தர் தூவ ரத்தர்
குழையாடு செவியரத்தர் கச்சியெனு மாகரத்தர் குணக்குன் றுரோ. (௩௩)

### சித்து - ஆசிரியவிருத்தம்.

குன்றைக் குனித்தகச்சிக் கோமானுர் சித்தவுருக்
 கொண்ட நாள்யா
மென்றைக்குஞ் சிறப்பெய்த விச்சையுடன்
 கற்றவித்தை யிற்றென் றுமோ
மின்றைக்கு முடிவேந்தர் விரும்பவொரு
 தினத்திரும்பு தனைப்பொன் செய்வேம்
இன்றைக்குப் பொன்னளித்து நாளைவெள்ளி
 யியற்றினும்பின் சனிய தாமே. (நச)

### இதுவுமது.

சனியாகு மூழ்வலியாற் சகலகலை யறியுணர்ச்சி
 தகைபெ றுதால்
தனியாகு மெங்களுத வியைப்பெற்றுச் சாற்றும்ப
 ரடைந்தார் பொன்னில்
கனியாரும் பொழிற்கச்சிக் கண்ணுதலா கைச்சிலம்பைக்
 கனக மாக்கிப்
பனியாருங் கடல்வண்ணன் மார்பினைப்பொன் னிருப்பாகப்
 பண்ணி னேமே. (நரு)

### கலிநிலைத்துறை.

இருப்புக்கு வெண்பொன் பசும்பொன் னகங்கொண்ட
 விறைவாவெனைக்
கருப்புக் குழன்றெய்க்க வையாம லருள்கூர்ந்து
 காப்பாய்கொலோ
பொருப்புக்கு வீழப் புவிக்காடை பொங்கப்
 புரஞ்செற்றசெந்
நெருப்புக்கு வதனத் திடந்தந்த வொருமா
 நிழற்சோதியே. (நசு)

### நேரிசைவெண்பா.

சோதிப் பரம்பொருள்வாழ் தூயவிடந் தொண்டாநெஞ்சோ
வேதத் தனிமுடியோ வேள்விபுரி—மாதவர்வாழ்
தில்லையோ கூடலோ சீர்க்கயிலை மாமலையோ
தொல்லையே கம்பமோ சொல்.

### இளவேனில். ஆசிரியச்சந்தவிருத்தம்.

பனிக்கால மேகப்ப லம்பூவி றைக்கும்
 பருவத்த ருட்கச்சி யிறையிங்கு வாரான்
குனிக்கோல நம்பன்ற ணிப்பென்ன சொல்வான்
 குன்றத்தி ருந்தானை மன்றத்து வைத்தே

தனிப்பாக வென்னைப்ப சப்பிக்க லந்த
சமயத்து ளைச்சத்தி யங்கூறி யரவை
இனிப்பாரு மொழியாள னிதுசெய்த லழகோ
வென்றேயு டன்கேட்ப னினியென்ன குணமே. (௩௮)

**மடக்கு. ஆசியவிருத்தம்.**

குணதிசைவெய் யோற்கலரு மரவிந்தம் பானலமே
குலைந்திடுந்தென் பொதியில்வரு மரவிந்தம் பானலமே
கணமிகுவென் முத்துயிர்க்கு நந்தனந்தங் கயலாமே
கச்சியிறை தணத்தலின்வார் நந்தனந்தங் கயலாமே
அணங்குறவின் மதன்முளரி முலையெய்திடு மாசுகமே
ஆசற்று ரிதழ்பருக முலையெய்திடு மாசுகமே
வணமணியின் பரஞ்சுமந்த வாழிதயங் கருங்கலமே
வஞ்சருக்கென் னெஞ்சரங்க வாழிதயங் கருங்கலமே (௩௯)

**பாண். நேரிசையாசிரியப்பா.**

கலன்பணி யுடைதோல் கலம்பலி யோடுகொண்
டிலந்தொறு மிரந்து ணிறைதரு மொற்ற
மலைவளா காதலி மங்கள வல்லி
சிலைவேட் களித்த சிற்சுக மங்கை
இழைவகிர் நுண்ணிடை யேந்திழை பங்கன்
பழைய கள்வன் பண்பினை யோர்ந்தேன்
பாணனே நின்னைப் பண்ணிசை கூட்டி
வீணையிற் பாடி விழைவை யூட்டித்
தன்வயப் படுத்தத் தந்திரங் கற்பித்
தென்வயிற் செலுத்து மிங்கிதந் தோன்றப்
பாடினை யின்புறப் பாடல் கேட்டாங்குக்
கூடிய கொற்றவன் குணமறி வாயோ
மலைப்பெணந் தரியை மகிழ்வாய் மணந்து
மலைப்பெணைச் சடையி லமைத்த தேனுள
கம்பை நதியயல் காம நயனியா
மம்பை யருச்சனை யாற்றல்கண் டவளை
யுள்ளங் கலங்க வோங்குநீ ரழைத்துக்
கள்ளப் புணர்ச்சி கலந்து வடுப்பட்
டின்னமு மாறு தேய்ந்த தன்மை
யென்னவென் றுரைப்ப னிதுவலா தொருநாட்
டாரு வனஞ்செலீஇத் தாபதப் பன்னியா
தெருமர லூற்றுப் பருவர லெய்தக்
கோவண நீத்துத் தீவணம் பூத்தம்
மின்னிடை யாருடன் விருப்புறப் பேசித்
துன்னிய தன்மை சொல்லுந் தகைத்தோ
வனிதையர் மயங்க வளைகொணர்ந் தன்று

மதுரையில் வந்த வசையே சாலுஞ்
சாலும் பாண சாலும் பாண
யாதுங் கேளேன் யானினி மயங்கேன்
போகென வுரைத்தும் போகா யந்தோ
அன்னை யறியா தணைந்தே னவனைப்
பின்னை யுற்றிடும் பீழை நினைத்திலன்
அகலுதி பாண வனையறி வாளேல்
தகரு நின்சிரந் தமரும் வெகுளுவர்
நெஞ்சி லிட்ட நெருப்பின் வெப்பினை
வஞ்சக னறிய வழுத்துவை பாண
மறந்தே னன்னையை மன்னனைப் புணர்ந்து
சிறந்தன மென்றே திகைத்தே னித்துணை
பட்டது சாலும் பாணனே மடவார்க்
கிட்டது தானே யியலும் பரமனை
வெறுத்தலும் வீணே விழைவு
பொறுத்தலு மிலனினிப் புரிவ னறனென்றே. (௪௦)

## ஆசிரியவிருத்தம்.

தொண்டாக் குறவே யானைத்
தூய மறைமா நிழலானை
அண்டாக் கிறையா மடலானை
யக்கு மெலும்பு மணிவானைக்
கொண்டல் வண்ண னெண்கண்ணன்
கூறற் கருஞ்சீர் கொண்டானைக்
கண்டத் துறையு மாறுகடற்
கடுவுண் டானைத் துதிப்பாமே. (௪௧)

## தூது-மேகம். நேரிசை வெண்பா.

கடுக்கைத் தொடைநயந்தேன் காதலுடை யார்யா
னடுக்கை யுறுமா நயந்தார்—கொடுக்கைக்குச்
செல்லே சிறந்தாய் திருக்கச்சி வாணர்பால்
வல்லே தொடையிரந்து வா. (௪௨)

## கட்டளைக்கலித்துறை.

இரந்துயி ரோம்பிட வேழை மனங்கொதித் தின்னலுற
வுரந்தொலைந் தோயப் பலநோ யுடற்ற வுறுபசியால்
வருந்துபு மானமுந் தீரமு மங்கி மடிந்தொழிவீர்
திரந்தரு மேகம்ப வாணனை நீரென்கொல் சேர்கிலிரோ. (௪௩)

## தூது - நெஞ்சு. நேரிசைவெண்பா.

என்னெஞ் சினுமினியா ரில்லையென வெண்ணியதைத்
துன்னற் கருங்கச்சித் தூயவர்பா—லின்னலறப்

பூங்கொன்றைத் தாரிரக்கப் போதி யெனவிடுத்தேன்
தீங்கொன்றைச் சூழ்ந்திலா தேன் (சச)

கலிநிலைத்துறை.

ஒன்று சூழின்வே றென்றுமூந் துறவுணர் வுலைந்து
பின்றை யெய்திடும் பெற்றியுந் துணர்விலாப் பேயேன்
என்று நின்னரு ளிருங்கடல் குளிப்பதென் னரசே
மன்றி லாடிய குழகமா நீழல்வாழ் மணியே. (சரு)

வஞ்சித்துறை.

மாநீழ னல்லார
ஆனேறு தொல்லார்
தேனேறு சொல்லார்
வானேறு கல்லார. (சசு)

ஆசிரியவிருத்தம்.

கல்லாலின் கீழிருந்து கலைவிரித்துப் புணாவளித்த
கள்வ னாக்குச்
சொல்லாலா யிரமுகமன் கூறுவையக் கச்சியர்க்குச்
சுகுண முண்டேல்
வில்லாடும் புயவிதழி விரும்புவையின் றேலின்றே
விழையப் பெற்றாள்
அல்லோடக் கண்டவிட மாயும்வகை யறிவளென
வறைதி மாதே. (சஎ)

நேரிசைச்சிந்தியல் வெண்பா.

மாவுடையான் வெள்ளி மலையுடையா னென்டிசையாந்
தூவுடையா னல்வேதச் சொல்லுடையான்—தாவிலறச்
சேவுடையா னெங்கள்குலத் தே. (சஅ)

ஊசல். ஆசிரியவிருத்தம்.

தேவார முதலியவைந் துறப்பும் வாழச்
சிறந்தமறை யாகமங்கள் செழித்து வாழத்
தாவாத சித்தாந்த சைவம் வாழச்
சந்தவனச் செந்தமிழ்நூல் தழைத்து வாழ
நாவாரும் புகழ்க்கச்சி நகரிற காம
நயனியொடு முறையிறைசீர் நன்கு பாடிப்
பூவாரு மலர்விழியீ ராடி ரூசல்
புத்தமுத நிகர்மொழியீ ராடி ரூசல். (சகூ)

மதங்கி. ஆசிரியவிருத்தம்.

ஆடரவ மனைக்கசைத்த வமலர்திருக் கச்சிமறு காடி மைந்த
ரூடுருவு பிணைவிழியோ டிணைவாளு மோச்சிவரு மொருமதங்கீ

நாடவரு மிவைக்கிலக்கம் யாதோநும் மொழியமுத நல்கீர் விண்ணோர்
பாடமையப் பயவாரி கடைந்துகரம் வருந்தியதென் பண்டு தானே. (ருo)

### இடைச்சியார். ஆசிரியவிருத்தம்.

பண்டுமலை கொண்டுபயோ தரத்திகலை வென்றிடுமைம்
படையா னுக்கு
மண்டுபயோ தரகிரியைக் காணிக்கை யிட்டீரால்
வள்ளல் கச்சிக்
கண்டயங்கு மிடைச்சியீ ராடைநீக் காதருசி
காண்மி னென்பீர
கொண்டவளை யுருக்காமே கொளவிணங்கீர் ததியெண்ணீர்
நயமோர் விற்றே. (ருக)

### தூது - வண்டு.

### நேரிசைவெண்பா

ஓர்காற் செலினறுகா லுற்றனையென் பார்வளமை
ஆர்காஞ்சி மேய வமலர்திரு—மார்பாருந்
தாராய கொன்றை தரச்சேறி வண்டேயான்
பேராத வின்பம் பெற. (ருஉ)

### ஆசிரியவிருத்தம்.

பெரியானைப் பேரின்ப நிறைவீட் டானைப்
பிறைமதியம் பிறங்குசடா தரனை யார்க்கு
மரியானை யடலவுணர் புரநீ றுக்க
வழலூற்று நகையானை யரனை வேழ
வுரியானைத் திருக்கச்சி யுடையான் றன்னை
யுன்னரிய குணநிதியை யொப்பில் வேதப்
பரியானை யகநிறுவித் துதிப்பா ரன்றே
பவத்து வக்கைப் பாற்றுறுமா டவர்க ளாவார். (ருங)

### வெறிவிலக்கு. ஆசிரியவிருத்தம்.

ஆடவரும் பெண்மைவிரும் பபிராமர்க் கணங்குற்ற
வறிவி லேனைச்
சாடவருஞ் சிறுகாலுந் தழன்மதியுஞ் சாகரத்தி
னொலியு நெஞ்சம்
வாடவரு மலர்க்கணையு மறிவீய விரிந்திடுமோ
வனசத் தானுந்
தேடவரு மேகம்பா தாமத்தைக் கொணர்வீரோற்
றேறு வேனே. (ருச)

### கட்டளைக்கலித்துறை.

தேறு மனத்தைத் திருப்பித் தெளிவுறச் செய்துபின்ன
ராறுத மும்மை மலப்பிணி நீங்கால் லாற்றினுய்ப்பர்

மாறு வளக்கச்சி மாநிழ லாரு வனன்றனக்குப்
பாறு தரவ மணிந்தவர் பேரருள் பாடுதுமே. (ருரு)

கட்டளைக்கலிப்பா.

பாடு பட்டும் பயன்றரு கச்சிவாழ்
பண்ண வன்னடிப் பத்தியில் பாவிகாள்
கூடு விட்டுயிர் போம்பொழு தொன்றையுங்
கொண்டு போதலி லாமையை யுன்னிலீர்
வீடு கட்டுவிர் வெள்ளிபொன் னீட்டுவீர்
வேண்டு நன்மணி யாடையும் பூணுவீர்
ஏடு கட்டிய பாறயி ருண்ணுவீ
ரொப்ப டிப்பெறு வீர்பொற்ப தத்தையே. (ருசு)

கட்டளைக்கலித்துறை.

பதஞ்சேர்த்துப் பாடியென் பாசத் தொடர்ப்பட்டுப் பாவையரிங்
கிதஞ்சோத்துக் கொஞ்ச மயங்கி யிடாப்பட் டிரங்குவனங்
கதஞ்சோத் தனைக்கசைத் தாய்கச்சி வாண கடையனெந்த
விதஞ்சோத னின்பதந் தாயனை யாய்கதி வேறிலையே. (ருஎ)

கலிவிருத்தம்.

அனைத்திடமு மொளிமருவ வமைந்ததொரு விழியே
மனத்துயரை மாய்க்கவருண் மலாந்ததொரு விழியே
சினத்துலகைச் சிதைக்கவழல் சிறந்ததொரு விழியே
நினைத்துலகந் தொழுகச்சி நின்மலாமூ விழியே. (ருஅ)

ஆசிரியச்சந்தவிருத்தம்.

விழியால் விழியுறு பிறழ்வால் விதுநிகா
நுதலா னுதலுறு சிலையான்மென்
மொழியான் மொழியுறு சுவையான் முழுநல
முலையான் முலையுறு பொலிவாற்பல்
வழியாற் கணிகைய ருறவால் வலிகெட
வயர்வே னினிமருண் மருவாமே
ஒழியா நலனுற வொருமா நிழலுடை
யொளியாா சடையவ ரருள்வாரே. (ருகூ)

சந்தத்தாழிசை.

சடைகரந்த வரவமிந்து பகைமைமாறு தகைமையார்
தரமறிந்து கருணைநல்கு துணையிறந்த மகிமையார்
மடைதிறந்த கடலையொத்த மருளகறறு மருளினொ
மகிழ்சிறந்த முதல்வாதங்க மலைகுழைத்தென் விறல்மதன்

படைதுரந்து நெஞ்சிருப்பு வஞ்சரோன் குழைத்திலர்
பகரொணாத பண்பமர்ந்த பரமரின்னு மருகுறா
திடைமறந்த தென்கொலோவெ னிளமைநன் னலம்பெறற்
கெனையணைந்த கச்சிமேவு மிணையிகந்த போதரே. (சுo)

கட்டளைக்கலித்துறை.

போதவித் தேபுக லேயற வோர்க்குநம் புந்தகையார
தீதவித் தேற்குநற் செவ்விய னேபுலத் தெவ்வடர
வேதவித் தேமிக வேசறு வேற்கு விளைந்தருணீங்
காதவித் தேன்சுர ருண்கச்சி வாழன்பர்க் கண்ணியனே. (சுக)

நேரிசைவெண்பா.

அண்ணியரா ரறவோர்க் கத்த ரலரிதழிக்
கண்ணியாரூங் கச்சிநகர்க் கத்தரடி - மண்ணியமுத்
தந்தம்பற் பந்தார் தனந்தந் தனவிடையார
தொந்தங்கொ ளென்றன் றுணை. (சுஉ)

ஆசிரியவிருத்தம்

துன்னிமித்தங் கண்டுமெஞ்சா தொருதுணையும் பிணையாது
துணைந்து சென்று
பொன்னிமித்தஞ் சிலைசுமந்து முறுவலித்துப் புரமெரித்த
புரைதீ ரெந்தாய்
என்னிமித்த மென்னகத்தே குடிபுகுந்தாய் திருக்கச்சி
யிறைவா வேழை
தன்னிமித்தந் திருவுள்ளங் கனிந்ததன்றித் தகுதிமற்றென்
றருக்கி னேற்கே. (சுங)

ஆசிரியவிருத்தம்.

தருக்குறு தெரிவையர் செருக்கிலே
தளையிடு மவாமொழி யுருக்கிலே
மருக்கமழ் குழலணி சொருக்கிலே
மனமிவ ரிளமுலை நெருக்கிலே
பெருக்குறு விழைவமர் திருக்கினேன்
பிசிதரு மறைமுதல் பிறையினோ
டெருக்கணி கச்சியி னிறைவனு
ரிரங்குறு வகையெது புகல்வனே. (சுச)

மடக்கு. ஆசிரியவிருத்தம்.

கற்றரு மாதின் பங்குடையார்
கச்சிய ரானதின் பங்குடையார்
சிற்றளை யுள்ளுறை வாயலவா
தென்வளி காதுறை வாயலவா

சுற்றுமு டைந்து வருந்திடோ
தோற்றுமி டைந்து வருந்திடோ
பெற்றிடு முத்தம ருங்கழையே
பேசரி யாஊம ருங்கழையே. (சுரு)

**பனிக்காலம். ஆசிரியச்சந்தத்தாழிசை.**

அழைக்காம லணுகார்வெவ் வலர்கூர மாய்வே
னையோவெ னையர்க்கு னைப்பாரு மில்லை
கழைக்காம னெய்யுஞ்ச ரந்தைக்க நொந்தேன்
கண்ணுள ரிந்தப்ப னிக்கால மோரார்
குழைத்தாரபொ ழிற்கச்சி வாழண்ண லானைக்
கும்பிட்ட ழைப்பீரு ழைப்பீரம னத்தைப்
பிழைத்தேன லேனென்று பிச்சாக்கி யம்பீர்
பெண்பேதை யுய்யுந்தி றம்பாங்கி மாரே. (சுசு)

**மடக்கு. ஆசிரியவிருத்தம்.**

மாதனையிற் றருநறும்பூ விளைவிடுக்கும் காலம்
மதன்சினந்து மங்கையரை விளைவிடுக்குங் காலம்
காதமணங் கமழ்சோலை பண்புணருங் காலம்
கணவரிளங் கோதையாதம் பண்புணருங் காலம்
சீதமுறு கழைக்கரும்பின் கண்டழைக்குங் காலம்
சிறறிடையார் தந்தலைவாக் கண்டழைக்குங் காலம்
கோதறுசங் கினம்பழனப் பங்கமுறுங் காலம்
குலவுகச்சி யார்பிரியப் பங்கமுறுங் காலம். (சுஎ)

**வஞ்சிவிருத்தம்.**

உறுமன் கச்சி யுத்தமயான்
துறவுங் கொள்ளேன் றூய்மையிலேன்
அறமும் புரியே னமைவில்லேன்
பெறவுந் தகுமோ பேரின்பே. (சுஅ)

**இன்னிசைவெண்பா.**

இன்படைய வேண்டி னிகலறக - வன்பிறவித்
துன்பொழிய வேண்டினவந் துன்னறக - அன்புருவாம்
போதனருள் வேண்டுமெனிற பொய்யறக - சூதகலச்
சூதவிழ லான்கழலைச் சூழ். (சுகு)

**நேரிசைவெண்பா.**

சூழுந் தளையாய தொல்லைப் பிறவியினைப்
போழு நவியமாம் புத்தேளிர்—தாழுநலம்
பொன்று வளக்கச்சிப் பூங்கொன்றைக் கண்ணியர்தம்
இன்றாட் டுிம்பச் சிலை. (எ0)

கலிநிலைத்துறை.

பச்சைநி றப்பைந் தொடிவல மேவிய பசுபதியுள்
நச்சின ரொன்றினு மெச்சமு ருதரு ணனிகூாவான்
கச்சியு றைந்தருள் கண்ணுதன் மறலிக் கண்டகனுல்
அச்சமு ருதடி யவர்முன மந்தத் தணுகுவனே. (எக)

மடக்கு. ஆசிரியவிருத்தம்.

அணங்காறு தலையுள்ளா ரழக ரொன்மா
னணங்காறு தலையுள்ளா ரானு ரந்தோ
வணங்கூடு தலனலைப்பற் றுற்று மின்னுள்
வணங்கூடு தலனலைப்பற் றறுத்த லோரார
கணம்புரத்தைச் சாம்பருவந் திழைத்தார் கன்னற்
கணம் புரத்தைச் சாம்பருவங் குலைப்ப துன்னா
பணமொளிக்கும் பணிதரித்தா கச்சி யீசா
பணமொளிக்கும் பணிபரித்தா பான்மை யுற்றே. (எஉ)

கட்டளைக்கலிப்பா.

உற்றுப் பாாக்கினுன் வாழ்க்கையென் னையமே
யூரும் வெட்ட வெளியுடை தோலுனைப்
பெற்றுப் பார்க்கு ளுறுஞ்சுக மில்லையாற்
பேதை நின்னையென் பெற்றிடப் பற்றினள்
கற்றுத் தோந்த பெரியவா வாழ்திருக்
கச்சி மாநகாக் கத்தவென் னத்தனே
பற்றி லாருளம் பற்றுறு பங்கயப்
பாத னேபடப் பாம்பணி காதனே. (எங)

ஆசிரியவிருத்தம்.

படவரவ மனைக்கசைத்த பரமா வாழும்
பதிக்கச்சி மேயவிளம் பாவை கொங்கை
தடவரையே கரிக்கொம்பே சகோர மேமாங்
தளிரமேனி தமனியத்தி ஞெளியே கண்கள்
விடவடிவே யாசுகமே வேலே சேலே
மென்மருங்குன் முயற்கோடே விழைந்தே னெஞ்சகுஞ்
சுடவகைதோ புருவமதன் சிலையே துண்டஞ்
சுடாக்குடையே சுந்தரிகந் தருவ மானே. (எச)

தவம். கட்டளைக்கலித்துறை.

மான்கொண்ட கண்ணியர் மையலற் றேதவ வன்மைமரீஇ
யூன்கொண்ட துன்பை யொழிக்கத் தலைப்படு மூத்தமர்காள்
வான்கொண்ட வுச்சி வரைமுழை யுற்று மயர்வதெவன்
கான்கொண்ட கொன்றையா கச்சியை யெய்திற் கலியறுமே. (எ(

### இரங்கல். ஆசிரியச்சந்தவிருத்தம்.

எய்தவம்பு தைக்குமுன்ன மற்றொபகழி தொட்டுவே
ளேழையங்க ணைந்துதேய வப்புமாரி பொழிகிருன்
செய்தவம்பு ரிந்திலாதெ னுய்யுமாறு முண்டுகொல்
திகழுமாட மதியுரிஞ்சு கச்சிமேய செம்மலாா
கைதவங்க ணங்கியான்மன் மதனைவென்ற காதையெ௳
காதனேக்கி யின்பளிக்க நேர்வரல்ல ரோலனே
வைதவம்பு நோக்கியேனு மனமுவக்க வந்திலா
மாதர்நோவ வெய்துசெல்வ மென்னவர்க்கு மங்கையே. (எசு)

### நேரிசைவெண்பா.

என்னபிழை செய்தானு மேழையே னுக்கிரங்கு
மன்னுபுகழ்க் கச்சியுறை வள்ளளுன் - துன்னுமயன்
கம்மாள னீசன் கடையன் பொதுவனென்பேன்
கைம்மாறென் செய்வனோ காண். (எஎ)

### சம்பிரதம். ஆசிரியவிருத்தம்.

காற்றைப் பிடித்தொருசிறு கரகத்துண் மூடுவேங்
கனலைவா னேங்கவிடுவேம்
சேற்றைப் பிசைந்துசில தேவரையு மாக்குவேஞ்
சீதரனை மாலாக்குவேம்
ஆற்றைச செலுத்தியரி யேறவைப் பேமமுதை
யாவருடன் வாரியுண்பேம்
நீற்றைப் புனைந்தவர் திருக்கச்சி போன்றதல
நோதருஞ் சத்தி யெமதே. (எஅ)

### கட்டளைக்கலிப்பா.

சட்டப் பட்டவு ளம்பெற்ற சால்பினோ
தங்கப் பெற்றகச் சிப்பதிச் செல்வவேள்
குட்டப் பட்ட தலைவிதி யென்றலை
கொடுமை கூரொழுத் திட்டனன் மாதர்வாா
கட்டப் பட்டத னம்பிறை வாணுதல்
கடுவ டங்கிய கண்ணின்ம யங்குவேற்
கிட்டப் பட்டமட் டின்பமும் வாய்க்குமோ
வீசனேயரு ணேசவி லாசனே. (எகூ)

### ஆசிரியவிருத்தம்.

அருணைப் பதியி னழலுருக்கொண்
டமைந்த கச்சி யங்கணாமுன்
பெருமைப் புரத்தை யழிவெப்பும்
பிழைத்த மதறகொல் விழிவெப்பும்

பொன்னனைய திருமேனிப் பொலிவுமே யெனைமயங்கப்
புரியுங் கண்டீர்
அன்னநடைக் கன்னன்மொழிப் பிச்சியீ ரணிமுறுவ
லதிக மன்றே. (கக)

## ஆசிரியவிருத்தம்.

அதிக மன்றெளி யேந்துயர் புரிந்திடு மறக்கடை யாயுங்காற்
றுதிகொ ளேகம்ப வாணனுர் தூயவ ரிதயவா லயத்தூடு
குதிகொ ளின்புரு வாயவர் மாதொரு கூறுடைக் கோமானுர்
நதிகொள் வேணியர் நாடுவோர் தமக்கமை நலத்தினைத் தெரிந்தாரோ. ()

## ஊர். நேரிசைவெண்பா.

தெரிந்தார் மலர்த்தடத்தின் றெண்ணீர் துலைக்கோல்
பரந்தாழுங் கச்சிப் பதியே—கரந்தாழ்வெண்
மாதங்கத் தானத்தன் வாரிசத்த னேடரிய
மாதங்கத் தானத்தன் வாழ்வு. (கங)

## ஓரொலிவெண்டுறை.

வாழ்வளிக்குந் திருவிழியார் மறையளிக்கு மருமொழியார் வணங்கி னேர்தந்
தாழ்வகற்று மலர்ப்பதத்தார் தளாவகற்று மைம்பதத்தார் தண்ணங் திங்கட்
போழ்வதியும் புரிசடையார் புகழ்க்கச்சி மேய
ஆழ்கருணை மாகடலை யடிபணிமின் கண்டீர். (கச)

## இரட்டை ஆசிரியவிருத்தம்.

கரத்தின் வளையுஞ் சுழிவளையுங்
கனிந்த மொழியாற் புனைவளையும்
கலையு மணியு மேகலையுங்
கல்வி பயின்ற கலையறிவும்
புரத்தின் வனப்பு நூபுரமும்
புளைதீ ரகத்தின் வற்புரமும்
பொலன்று டணையும் பூவணையும்
புரியும் பணியும் பொற்பணியும்
வரத்தி னுதித்தா ளொழித்தாளம்
மடமா னுடல மொழித்தாலும்
வளமா வடியீ ருமைச்சரணு
மருவப் பெற்று ளாதலினற்
சிரத்தி னலைமான் வைத்தீர்நுஞ்
செந்தா மரைத்தாட் கீழேனுஞ்
சேருந் திறத்தை யறிவாளே
சிறியாண் மதனை வென்றிடவே. (கரு)

### இரங்கல். மடக்கு.
### எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

மதனைவென்றவர் நஞ்சமார்ந்தவர் வலியர்முண்டக முள்ளியே
மகிழ்நர்வந்திலர் மாலைதந்திலர் துயர்வதுண்டக மூள்ளியே
கதமிகுந்தெழு மத்திநீர்த்துறைப் பெடைபிரிந்தில கம்புளே
கவலைகூரவு ளூற்றிமேவுறு நறைசொரிந்தில கம்புளே
மதியினெற்றரு முத்தமேயவர் தருவதென்றரு முத்தமே
மணியுயிர்த்திரை சங்கமேயிர வொன்றுபற்பல சங்கமே
நிதிதருந்தவ வங்கமேயினி யடைவதுந்தவ வங்கமே
நெடியனுந்தொழு கம்பமேயுறை நிமலர்தீர்ப்பர்கொல் கம்பமே. (௩௬)

### செவியறிவுறூஉம் மருட்பா.

கம்பத் திருந்துதவுங் கண்மணியைச் சிந்தித்து
நம்பத் திருந்துவீர் நானிலத்தீர் - வெம்பும்
பிணியு மூப்பும் பீடழி பழியுந்
தணியா வறுமைத் தாழ்வுந் தீரும்
திருவரு ணமக்குச் சிவணத்
தருவ னன்னோன் சற்குரு வாயே. (௩௭)

### இரங்கல். இரட்டையாசிரியவிருத்தம்.

குருகு நெகிழுந் திறநவில்வாய்
கழிசேர் குருகே குருகழியக்
கொங்கை திதலை பூப்பவுளங்
குலைந்தே யுடைய வுடைசோரப்
பருகும் பாலு மருந்தனமும்
பகைக்கு மருந்தென் றறையனமே
பருவ மனைய குழல்பூவைப்
பரியா மையைச்சொல் பூவையே
அருகு பயின்ற கிளையேயென்
கிளையால் வந்த தத்தையு
மளந்த படியே யளந்தாலு
மதுவே சாலு மளியினமே
முருகு விரிபூம் பொழிற்கச்சி
மூவா முதல்வ ரளியினமு
முறையோ வளியேற களியாமை
கேளி ரிதனைக் கேளீரோ. (௩௮)

### இரட்டை யாசிரியவிருத்தம்.

கொங்கோமா ரூற கிளையொறுப்பீர்
கேத முறுவீர் கெடுமதியா ற
கிளிவாய் வளாவின் மகளிர்பால்
கிட்டி மயங்கித் தியங்குவீர்

வாளா கழிப்பீர் வாழ்நாளை
வசையே பெறுவீர் வல்வினையீர்
வளமாந் தருவா யுலகுய்ய
வந்த கருணை யார்கலியைத்
தோளா மணியைப் பசும்பொன்னைத்
தூண்டா விளக்கைத் தொழுவார்தந்
துயரக் கடற்கோர் பெரும்புணையைத்
துருவக் கிடையா நவநிதியை
வேளா டலைமுன் றீர்த்தானை
வேழ வுரியைப் போர்த்தானை
வெள்ளம் பாய்ந்த சடையானை
வேண்டிப் புரிமின் றொண்டினையே. (௯௯)

## ஆசிரியவிருத்தம்.

தொண்டர் சிரத்தின் முடிக்கும்பூ
தொழுவா ரிதய நடிக்கும்பூ
அண்டர் முடியிற் றுலங்கும்பூ
அருமா மறையி னிலங்கும்பூ
பண்டை வினைப்பற் றழிக்கும்பூ
பணிவா ரல்ல லொழிக்கும்பூ
தெண்ட னிடுவோர்க் கருள்கச்சித்
திருவே கம்பர் பதப்பூவே. (௧0(

# கச்சிக்கலம்பகம்

முற்றுப்பெற்றது.



# நளவெண்பா

## சுயம்வரகாண்டம்.

# இலக்கண இலக்கியக் குறிப்புகள்.

---

# NOTES

## Grammatical and Explanatory.

### GENERAL REMARKS.

1. நளவெண்பா வென்னும் பெயர்க்கு நளச்சக்கிரவர்த்தியின் சரித்திரத்தை வெண்பா வென்னப்பட்ட கவிகளால்கூறிய நூலென்று அன்மொழித்தொகையின பொருள்பட அர்த்தம்கொள்ளலாம். The History of Nala in Venba metre, வெண்பாவில் நளன் சரிதையென வடமொழி வழக்கின் பாற்பட்ட ஆங்கிலேய நடையானும் முன்மொழி பின்மொழியாகப் பொருள்படும். குறள் நாலடிபோல், செய்யுட்பெயர் தனி நின்று தருமார்த்தகாமமோக்ஷ விஷயங்கட்கு ஆகுபெயராயின சாதிரிசியத்தையே, அடையடுத்த வேங்கடவெண்பா நளவெண்பாக்களுக்குங் கொள்க. முதனூல் கருத்தனளவு மிகுதியென்னும நன்னூற் சூத்திரத்துறையிலும் தத்தம் பாடசாலை உபாத்தியாயா வாயுரையாலும் அவரவர் அபிருசிக்கும் இஙகிததிற்கும் ஏற்பமாணுக்கா விசாரித்துங் கொள்ளக் கடவர். சாதிரிசியம்=ஒப்பு=Analogy.

2. சம்ஸ்கிருதத்தில் ஸ்ரீஹர்ஷர் பிரசாதித்தருளிய நைஷததத்தை அதிவீரராமபாண்டிய ராஜன் தமிழ்விருத்தப்பாவால் மொழிபெயர்த்தருளினார். இவர்க்குப்பிற்பட்ட காலத்தில் குலோத்துங்கச் சோழராஜன் சபையில் சகவர்த்தமானிகளாய் விளங்கிய கம்பர் புகழேந்தி முதலியவித்துவான்களுக்குள், பாண்டியன் சொன்ன நைஷதம் சிறந்ததென்று சிலரும், சிறந்த தன்றென்று சிலரும் விவாதிக்கப் புகழேந்திப்புலவர், கல்வியிற் பெரியகம்பரது கட்சிக்கெதிரியாகி நளவெண்பாவென்னும் இந்த கிரந்தத்தைப்பாடி அரங்கேற்றுகையில், கம்பர் அதனை அவமதித்துக் கூறினாரென்றாலும், பின்னர்த்தம் வீட்டினிடத்தில் மற்றவித்துவான்கள் முகத்தில் நளவெண்பாவைத் தேனென்றும் அமுதமென்றும் அதனைநினைக்கத் தமக்குப்பசியாறிற்றென்றும் நன்குமதித்தாரென்று ஒருகதை ஐதீகமாக வழங்குகின்றது. இதுமுன்னதோ நைடதம் முன்னதோ வென்கின்ற விசாரத்திற்கும் அது எந்தக்காலத்ததென்கிற விசாரத்திற்கும் போந்தசரித்திரபலம் இல்லை. (விசாரம்=Inquiry) புகழேந்தியும் கம்பரும் சகபாடிகள், அங்ஙனமே கம்பரும் ஒளவை

யும் சகவர்த்தமானியர். அவ்வாறே ஒளவையாரும் நாயனாரும் ஏககாலத்தார். இதுபற்றி எண்ணியசகாத்த மெண்ணூற்றேழன்மேல் என்று கம்பர் குறித்த வருஷக்கணக்கை ஒப்புக்கொள்ள வேண்டியதென்னில், இது கூடாது, வடராச்சியத்திராசாக்கள் காலக்கிரமத்துடன், தென்தேசத்தரசர் காலக்கிரமத்தையும் பாவைஷகளது காலாந்தர விருத்தியையும் ஒத்துக்காணுமிடத்து, கிறிஸ்து வருஷம் - நூசா றுக்குமேல் இதநியாதி தமிழ்கிரந்தங்கள் பிறந்தனவென்று ஆங்கிலேய காலகணிதபண்டிதர் துணிகின்றனர் (conclude.) இக்கொள்கைக்கு மாறு கோளாருமுளர்.

3. காண்டம் - செய்யுட் கூறுகளிலொன்று - A Section or Canto.

4. சுயம்வரம் Marriage ceremony of the nobility or as some suppose, it is the brides' choosing her royal consort from among the many assembled under a Pandal erected for the purpose.

5. காப்பு - keeping ;—Invocation, கடவுள்வாழ்த்து in kural ; தெய்வவணக்கம் in Beschi. நூதலிட்புகுதல் See 14th Sut. பொதுப்பாயிரம், Nannul

# காப்பு.

I. நேசரிதங் கூர நிலவலயந் தாங்கு நளன்
மாசரிதங் கூற வருந்துணையா - யீசன்
கரியா னனத்தான கருது புகழ்பூண்ட
கரியா னனத்தான கழல.

Analysis and Paraphrase.

1. நேசர்=நேசிக்கிறவர்கள்=அடுத்தவர்கள்=subjects;—இதம் for இதத்தை=சுகத்தை=happiness;—கூர=கொள்ள=அடைய=to have, to obtain;—This verb in the infinitive agrees with நேசர and governs இதம். நிலவலயம் for நிலமாகிய வலயத்தை=Land-circle=the earth (meaning his kingdoms and dominions);—தாங்கும்=காப்பாற்றும்=who will protect;—Fut-Rel-Participle=எதிர் காலத்துப் பெயரெச்சம். நளன்=நளசக்கிரவர்த்தி=Emperor Nala, in the Genitive ஆறாம்வேற்றுமை=நளனுடைய;—மாசரிதம்=மாக்கதை=பெரிய கதையை=the great history;—கூற=சொல்ல=to relate;—வரும் will come=Fut-Indic. agrees with கழல;—துணையாய்=உதவியாய்=helping, guiding; adverbial form of the noun துணை;—ஈசன்=சிவன் Siva, கரியான=விஷ்ட்ணு=the *black one*=Vishnu, அனத்தான்=பிரமா=the Swan-vehicled;—கருதுபுகழ்=கருதுகின்ற துதி for துதியை=the praise that (those three gods) contemplate,—ஈசன் and கரியான் and அனத்தான் are nominatives to கருது=வினைத்தொகை=crude form of the verb கருதுகிறேன்; பூண்ட=அணிந்த=who has adorned himself with,—(governing புகழ்);—கரியான னத்தான் கழல்=கரியின் ஆனனத்தானுடைய கழல்=யானைமுகத் தனதும்=the foot of the elephant faced deity; Nom to வரும.

---

## Paraphrased Reading.

அடுத்தவர்கள் அனுகூலத்தை அடைய பூசக்கரத்தைக் காக்கும் நளனுடைய பெரிய கதையைச் சொல்ல (வரும) உதவிசெய்யும் சகாயமாய் (நின்று)—சிவனும் விஷ்ட்ணுவும் பிரமனும் பத்திபண்ணுகின்ற ஸ்தோத்திரத்தை (உவப்பாய்) அணிந்தயானை முகத்தோ (விநாயக) னதுபாதம் எனறவாறு.

Syntactical Outline.

கூரத்தாங்கு நளன் சரிதங்கூறக் கரியான னத்தான் கழல் வரும்:—எப்படிப்பட்ட கரியான னத்தான் என்னில்? ஈசனும் கரியானும் அனத்தானுங் கருதுகின்ற புகழைப்பூண்ட கரியானனத்தான்.

II. கலாப மயிலிருந்த பாகத்தார் கங்கை
யுலாவு சடைமே லுறையு - நிலாவை
வழியவார்த் தாலன்ன மாநீற்றார் நாகங்
கழியவார்த் தார்நமக்கோர் காப்பு.

## Analysis and Paraphrase.

கலாப for கலாபம்=கலாபமுடைய ;—மயில்=Peacock, meaning Parvati ;—Nom to the next word இருந்த=in or on which she is seated—பாகத்தார்-இடப்பக்கத்தார்=he who has the left side ;—கங்கை=சலம்=Ganges or water—Nom to the next word உலாவு=உலாவுகிற=moving—Root put for பெயரெச்சம்=வினைத்தொகை ;—சடைமேல்=சடைமுடிமேல்=over his tresses or locks of hair ;—உறையும்=இருக்கும்=that is or dwells ;—நிலாவை=சந்திரனை=the Moon ;—வழிய=வடிய=to beoverspread ;—வார்த்தால் if poured—அன்ன=போல as=as if the Moons' beams were poured -governing நிலாவை ;—மாநீற்றார்=விபூதியையுடையவர்=he who has the holy ashes ;—நாகம்=பாம்பு=பாமபுகளை=snakes ;—கழிய=மிகுதியாக ;—ஆர்த்தார் கட்டினார்=அணிந்தார்=he who wears ;—நமக்கு ;—ஓர்=ஒரு=ஒப்பற்ற=matchless;—காப்பு=காவல்=Protection.

## Syntactical Outline.

பாகத்தார் (ஆகிய) மாநீற்றார் (ஆகிய) ஆர்த்தார், நமக்கு காப்பு.

1. நமக்கு என்பதை நாம் என்றுகொண்டால் பாகத்தானை மாநீற்றானை ஆர்த்தானை காப்பாக உடையோம் எனவரும்.

2. பாகத்தார் மாநீற்றார் ஆர்த்தார்=Subject. காப்பு=Predicate.

3. பின்வரும்பாட்டில், இருபெயரொட்டுப் பண்புத்தொகையே போலும் பலபெயரொட்டுப் பண்புத்தொகையுங் கொள்க வென்பதற்கு ஒருபொருட்பல் பெயர பிரிவிலவரையார என்னும் விதியைக் கொள்ளினும் அமையும்.

III. ஆதித் தனிக்கோல மானா னடியவற்காச்
சோதித் திருத்தூணிற் றோன்றினான் - வேதத்தின்
முன்னின்றான் வேழ முதலே யெனவழைப்ப
வென்னென்றா னெங்கட் கிறை.

## Analysis and Paraphrase.

ஆதி=முதல்=Original ;—தனி=சுயம்பு=தானாகிநிற்பவன்=Self, the Original Self ;—ஆதியாகியதனி=இருபெயரொட்டுப்பண்புத்தொகை=two nouns in apposition ;—கோலம்=உருவம்=form or manifestation ;—ஆனான்=one who became (Indic-Past 3rd Pers.—Sing Masc of the Root ஆ or ஆகு) ;—அடியவற்கா for அடியவனுக்காக=பிரகலாதனனுக்காக=On account of, or, for the sake of (his) servant ;—ஆக=ஆய்=ஆ are equivalent particles ;—சோ

தி=ஒளி=brightness for bright ;—திரு=பரிசுத்தம்=holiness for holy ;--தூணில்=in or from the pillar ;—தோன்றினன்=அவதரித்தவன்=one who manifested himself or (became) incarnate ;—வேதத்தின்முன்=ஆதிநூலின முன்= in the beginning of the Vedas,=நின்றான்=இருந்தவன்=he who was ;—இறந்தகாலதது வினையாலணையும் பெயர் - an inflectional noun of the past tense ;—வேழம்=யானை=elephant, Nominative to அழைப்ப ;—முதலே=ஆதிமூலமே =O thou Original Cause (Vocative) ;—என for என்று or என்று சொல்லி= saying ;—அழைப்ப=கூப்பிட=to call (Infinitive) for when (the elephant) called (Subjunctive) ;—என் for என்ன or ஏன்=Yes here I am ;—என்றான்= என்றவன், என்றோடிவந்தவன்=he who said, or advanced readily ; — எங்கட்கு for எங்களுக்கு=நமக்கு=to us ;—இறை=அரசன, தேவன்=god or governor.

## Paraphrased Reading.

ஆதியாகிய, தனியுருவமாய் நின்றவன் ஆகிய, பக்தனுக்காக ஒளி (பொருந்திய) பரிசுத்தமான தூணினின்று வெளிப்பட்டவன் ஆகிய, முதனூல்களின்முன் இருந்தவன் ஆகிய, கஜேந்திர ஆழ்வாரானவர் ஆதிமூலமேயென்று கூப்பிட்ட போது ஏன் என்று உடனே வந்தவனாகிய விஷ்ட்ணு, எங்களுக்குப் பெரியவன் என்றவாறு.

### Syntactical Outline.

ஆனான் தோன்றினன் நின்றான் என்னென்றான் இறை. இருபெயரொட்டுப் பண்புததொகையே போலும பலபெயரொட்டுப்பண்புத தொகையுங்கொள்க.

1. ஏன் எனகின்ற வினாசசொல்லானது என்னவென்பதற்கும ஏன என்பதற்கும பொதுபபகுதி. அஃது, எனனகாரியம என்று பெயரோடும ஏன் அழைத்தாயென்று வினையோடும வருவதாம என்னவேணடும், ஏனகேட்கிறாய் என்று வாராதோ வென்னில், என்னகாரியம என்னவிஷயம் எனப்பெயரெச்ச முடிபாகவே தமிழ்நடை செலலுதலாலும்,—அமமுடிக்குஞ் சொல்லாகிய பெயாக்குப்பின்னரோ அவ்வினை வருமாதலாலும,—மேலேகணட விதியை ஒருவாறு ஒப்புக்கொள்ளலாம் ஏன்பணம் ஏன்காசு என்பதிலும், பணமேன் காசேன் என்பது சிறப்பாமென்கிற பக்ஷத்தில், இருவழியிலும் வினைகொண்டே விரியுமாதலால், அவ்விதி ஒருவாறு பொதுவிதியாயச் செல்லுமென்றறிக :—இதற்குலவழக்கியலே சாட்சி, உம் :—என்ன + அது=என்னது என்னுமிடத்திலன்றி, ஏனைய விடங்களில் என்ன என்பதற்கு துவ்வீறு எழுவாயுருபாய் வாராமல்ததானே, மற்றையவேற்றுமைகளில் அத்துப்பெற்று எனனத்தைக் கொடுத்தாயென்றும் என்னத்தினால் இதைக்கண்டாயென்றும் வருதலால், ஏன் என்பது வினையுரிநீர்மைத்தேயாய், ஏனத்தை ஏனத்துக்கு ஏனால் எனவாராமையானும் வரமாட்டாமையானுமென்க.

2. இவன் எங்கட்குஇறை - இவன் எங்களுக்கு அரசனாய் இருக்கிறான். ஆனான் தோன்றினன் நின்றான் என்னெனறான் இந்நான்கும் ஒரேஎழுவாய் ; எழுவாய்=Subject, இறை=பயனிலை=Predicate.

## Free Rendering.

பாண்டவருள் மூந்தின அரசனாகிய தருமபுத்திரர் ஒருகாலத்தில் தமது இராச்சியமுழுவதையும் சூதில் இழந்து, பெரியவராகிய கிருஷ்ணர்தாமே மதத்யஸ்தராகப்போய் அரசைக்கொடு என்று கேட்க, அதற்குத்தரம், மாட்டமென்று எதிர்த்தவனாகிய துரியோதனனுடைய பெரியசேனைகள் பூமியுடனே கூடக்கெட்டழியும்படியாக மனஞ்சகித்த அவர் வனத்தில் ஏகாந்தத்தில் வசித்துக்கொண்டிருந்தார் வருந்தியென்றவாறு.

## Syntax.

1. Subject பொறுத்தான். Predicate. இருந்தான்.

2. முன்றோன்றல் பொறுத்தான் in apposition.

3. பொறுத்தான் இருந்தான் may be taken for பொறுத்திருந்தான். See Sut - 32 - வினையியல் Nannul.

4. பார்முழுதும்=Object, governed by தோற்று :—தோற்றுப் பொறுத்திருந்தான்.

5. Also மாளப்பொறுத்திருந்தான்

### Subordinate and Dependent clauses.

6. Subject - ஆண்டகை. Predicate - சென்று வேண்ட. Object - அவனி.

7. மறுத்தானுடைய இருந்தானை=Nominative to போய்மாள :—as போய்மாளப் பொறுத்தான் and வேண்டமறுத்தான் are செயவென் னெச்சத்தொடர்கள்=one verb governs another in the infinitive.

## Outline.

8. a. ஆண்டகைவேண்ட மறுத்தானது தானைமாள b. முன்றோன்றல் பொறுத்தான் இருந்தான்.

9. ஆண்டகை=Quality for the Subject=அன்மொழித்தொகை=Metonymy.

10. தாம்தோற்று, அவன்மாளப் பொறுத்தார் என, வாக்கியநடையில் இடைப்பிறவரல்களால் தழாதொடர் செயகை செய்யப்பட்டு நிற்கையால, பொறுமை வெறுமையாயிடித்த தெனனும் பழமொழி வலியை வற்புறுத்துமாறு, தோற்றுப்பொறுத்தானென்பதில் தம்தோல்விக்கண்ணே சமசிந்தையாய் நின்றவர், மாளப்பொறுத்தான் என்பதில் இவன்மாளவே வேண்டுமென்னு மடங்கருதிப் பொறுத்தாரல்லர், அவன் தானேமாளுங் கெடுதிககண்ணுஞ் சமசிந்தை செய்திருந்தார் என விளங்குதலால், ஈசுவரன் தீயோர் செய்யுந்தீவினைக்குக் காரணனாகாமையைக் கூறிற்றிந் நூன்மூதற் பாட்டென்றறிக.

ஆண்டகையேவேண்டமறுத்தான் மாளுகின்றான், நாம்போய் நடுவில் வீழ்ந்து அவனை மீட்பது தருமமன்றென்று பொறுத்திருநதார் தருமமொன்றுமாகும.

II. நாட்டின்கண் வாழ்வைத் துறந்துபோய் நான்மறையோ
ரீட்டங்கள் சூழ விருந்தானைக் - காட்டிற்
பெருந்தகையைக் கண்டார்கள் பேரெழிற்றோள் வேந்தர்
வருந்தகைய ரெல்லாரும் வந்து.

நாட்டின்கண் (நாடு + இன் + கண்)=in the country or in society ;—வாழ்வை=living ie. prosperity ;—governed by the next word—துறந்து=விட்டு=having left ;—போய=சென்று=and having gone ;—நான்மறையோர்=பிராமணர்=those (to whom) the four Vedas (belong)—genitive understood=நான் மறையோருடைய ;—ஈட்டங்கள=கூட்டங்கள்=classes, assembly ;—(Nom. to the next word) சூழ=சுற்றியிருக்க=to surround ;—இருந்தானை=him who was, ie தாமனை ;—governed by கண்டார்கள் ;—காட்டில்=வனத்தில்=in the jungle ;—பெருந் தகையை=பெரியதன்மையனை=அரசனை=the honourable one—in apposition with இருந்தானை—கண்டார்கள்=பார்த்தார்கள்=saw or visited ;—agrees with எல்லாரும்—பேரெழிற்றோள் (பேர great, broad, எழில் beauty, தோள shoulders)=பெரிய அழகிய புசங்களையுடைய வேந்தர=இராசாக்கள=kings ;—in apposition with the next word வருந்தகையா=வரத்தகுதியை யுடையோர்=those who are of equal honor to come to him ;—எல்லாரும்=all ,—வந்து=having come

ஸ்வதேசத்தில் அனுபவிக்கவேண்டிய செல்வத்தை விட்டுப்போய, பிராமணருடைய கூட்டங்கள் சூழும்படி (இருந்தவனைப் பெருந்தகையை) இருந்த பெரியோனை (தருமனை) கண்டார்கள், பெரிய அழகிய தோள்களையுடைய அரசர்கள், (வந்து) காணும்யோக்கியதையுடையோர் யாவரும வந்து என்க.

## Syntactical Outline.

1. Subject=(வேந்தா வருந்தகையா) எல்லாரும். Predicate=(வந்து) கண்டார்கள். Object=இருந்தானைப பெருந்தகையை.

## Subordinate and Dependent clauses.

2. வாழ்வை=Objective governed by துறந்துபோய் ;—Nom தருமர், understood. ஈட்டங்கள Nominative to சூழ. 3. இருந்தானைப பெருந்தகையைக் கண்டார்கள எல்லாரும.

4. எப்படி இருந்தானை ? சூழ இருந்தானை. யார்சூழ இருந்தானை ? நான்மறையோரீட்டங்கள் மேலும் எப்படி இருந்தானை ? வாழ்வைத்துறந்து போய் இருந்தானை. கண்டார்கள யாவா ? வருந்தகையரெல்லாரும வந்து.

5. நாட்டின் கண்வாழ்வை=ஏழாம் வேற்றுமைவிரி. வாழ்வைத்துறந்து போய்=இரண்டாம் வேற்றுமைவிரி. துறந்து போயிருந்தானை=செயவெனவெச்சத்தொடர். நான்மறையோ ரீட்டங்கள=ஆறும் வேற்றுமைத்தொகை, ஒன்றன் கூட்டத்துத் தற்கிழமைப் பொருள். ஈட்டங்கள சூழ, இடைப்பிறவரலாய் (dependent clause) வந்த எழுவாய்த் தொடர், சூழ இருந்தானை=செய

தையும், யாக்கோபின் வல்லவற்கு வாசஸ்தானத்தையும் காணுமட்டும்—தன் வீட்டின் கூடாரத்திலே பிரவேசியாமலும், தன்படுக்கையின் கட்டில்மேல்ஏருமலும்—தன்கண்களுக்கு நித்திரையையும், தன் இமைகளுக்கு உறக்கத்தையுங்கொடாமலும் இருப்பேனென்று—கர்த்தருக்கு ஆணையிட்டு, யாக்கோபின் வல்லவற்குப் பொருத்தனை பண்ணினுன்,—எனனுமித்தமிழ் வாசகநடையில், யதாப்பிரகாரமேற்றப்பட்டுள்ள இவ்வியபிரோயச்செய்யுளில்,—"கர்த்தருக்கு ஒரிடம்" என்றாலும், யாக்கோபின வல்லவறகு வாசஸ்தானமென்றாலும் பொருள ஒன்று, வார்த்தைமாத்திரம்வேறு, ஏனென்றால், கர்த்தன்தான் யாக்கோபின் வல்லவன், யாக்கோபின் வல்லவன்தான்கர்த்தன். "ஒரிடமதான் வாசஸ்தானம், வாசஸ்தானந்தான் இடம். அஙஙனமே வீட்டின் கூடாரத்திற பிரவேசித்தலும படுக்கைககட்டிலின்மே லேறுதலும பொருள ஒன்றே, சொற்கள்மாத்திரம் வேறு. அவ்வாறே கண்களுக்கு நித்திரை கொடாமையும் இமைகளுககு உறக்கத்தைககொடாமையும் பொருளில் ஒன்றுதான், பதஙகளோ வேறு. அஃதேபோல் காததனுக்கு ஆணையிடுதலும் யாககோபின் வல்லவற்குப் பொருத்தனை பண்ணுதலும் ஒருபொருள்மேல் (பல) வேறுசொல். இதறகும் தமிழ்ககும தம்முள்வேறறுமை யென்னெனில் யபிரோயநடையில் எதிரொதி ரிரனிறை; தமிழ்நடையில செவ்வெண்ணிரைமை. Psalm CXXXII.

7. வழிமுறை=மொழிமுறை=பரம்பரை=காணபரம் பரை=ஓரானோர்வழி=Tradition=transmission=succession.

> IV. மறைமுதல்வ நீயிங்கே வந்தருளப் பெறறேன்
> பிறவிப் பெருந்துயர மெல்லா - மறவே
> பிழைத்தேனயா னென்றானப் பேராழி யானை
> யழைத்தேவல் கொண்ட வரசு.

மறை for மறைகளுககு=வேதஙகளுக்கு=to or of the Vedas ;—முதல்வ for முதல்வனே=O author (voc) ;—நீ=thou,—இஙகே ;—வந்தருள=வரும்படியாக=to condescend to come ;—பெறறேன=அடைந்தேன்=I obtained=I was so fortunate ;—பிறவிப்பெருந்துயரமெல்லாம் (பிறவி+பெருந+துயரம்+எல்லாம்)=all the great pains (resulting from) birth or transmigration ;—அறவே=தொலையவே=to end ;—பிழைத்தேன்=தப்பினேன் தப்பித்துக்கொண்டேன் I escaped, got rid of ;—யான்=நான் ;—என்றான்=என்று சொன்னான் ;—அப்பேராழியானை (அந்த + பெரிய + ஆழியானை)=சக்கரத்தவனை=him (holding) the disk, ie Krishna ;—அழைத்து=அழைப்பித்து=having sent for ;—ஏவல்கொண்ட=தூதாளாகக் கேட்டுக்கொண்ட=who engaged (him) as his messenger ;—அரசு for அரசன்=the king ie Dharma Raja.

Free Reading.

வியாசபகவானைப் பார்த்துத் தருமபுத்திரர் சொல்லுகிறார் :—வேதங்களுக்கு ஆதியே, தேவரீர் இங்கே என்னிடம் எழுந்தருள அடைந்தேன், ஜனனத்

தின் பெரியதுக்கங்கள் எல்லாம்தொலைய நான்தப்பினேன் என்றான், அந்தப்பெரிய சக்கரத்தவனாகிய கிருஷ்ணனை (முன்னர்) அழைப்பித்துத் தூதுவக்கிரியையைத் தமக்காகச் செய்யும்படிக்கொண்ட (அரசு) தருமர் என்றவாறு.

## Syntax.

1. Subject=அரசு. Predicate=என்றான். 2. மறைமுதல்வ=முதல்வனே Voc. addressing Vyasa 3. நீ agrees with வந்தருள. 4. துயரமெல்லாம் nominative to அறவே 5 யான் nominative to பெற்றேன் and பிழைத்தேன்.

## Outline.

6. ஏவல் கொண்ட அரசு=என்றான். 7. மறை முதல்வநீ வந்தருளப்பெற்றேன் யான் என்றான.

## Dependents.

8 பெருந் துயரமெல்லாம் அறவேபிழைத்தேன் யான் (என்றான்.)

9. வந்தருளப் பெற்றேன் I am so fortunate that I have got your holiness to come to me. 10 பிறவித்துயரம் sorrows miseries and vicissitudes of life. 11. ஏவல் கொள்ளுகிறது to command, to engage.

V. மெய்த்திருவந் துற்றாலும் வெந்துயரம் வந்துற்றாலு
மொத்திருக்கு முள்ளத் துரவோனே - சித்தம
வருந்தியவா றென்னென்றான் மாமறையா லுள்ளந்
திருந்தியவா மெய்த்தவத்தோன் றேர்ந்து.

மெய்=மெய்யான=நிலையாகிய=true, substantial ;—திரு=செல்வம்=wealth ;— Nominative to வந்துற்றாலும் = வந்து சேர்ந்தாலும் = though amass or increase ;—வெந்துயர=வெவ்வியதுக்கம்=heavy trouble ;—Nominative to வந்துற்றாலும் ;—ஒத்திருக்கும் (ஒத்து+ இருக்கும்)=equal, indifferent ;—உள்ளத்து=உள்ளத்தை யுடைய=minded ;—உரவோனே=பலத்தவனே=O Thou Strong ;—சித்தம்=மனது=heart ;—Nominative to வருந்தியவாறு=சங்கடப்பட்ட காரணம்=the cause of your sorrowing ;—என் என்றான=asked what ;—The main Verb of the Stanza agreeing with மெய்த்தவத்தோன்=Vyasa ;—மாமறையால்=பெரிய வேதங்களால்=through the Vedas ;—உள்ளம=சித்தம்=the heart ;—(Nominative to திருந்தியவா) ;—திருந்தியவா for திருந்திய ஆறே=according as it is converted and purified ;—or திருந்தி + அவாம் being sedate or quiet, thus becoming desireable, amiable to others ;—மெய்த்தவத்தோன்=நல்ல தபசி=the true devotee ;—தேர்ந்து=உணர்ந்து=having perceived (something the matter with Dharma)—Vyasa questions him.

# Paraphrased Reading.

நல்லசெல்வம் உண்டானாலும், கடுந்துன்பம் உண்டானாலும் சமசிந்தையா

யிருக்கும் மனமுடைய பலவானே, தருமரே, உம்முடைய நெஞ்சம் துக்கித்திரு க்கிற வழி என்ன என்றுகேட்டார், வேதங்களால் தம் ஹிர்தயம் செலுவைப்பட் ட படிக்கேமெய்யான தவத்தையுடையோர் வியாசர்தெரிந்து என்றவாறு.

## Syntax.

1. Subject. மெய்த்தவத்தோன் Predic. என்னென்றுன.

2. (a) திரு Nom to உற்றுலும். (b) துயர் Nom to உற்றுலும். (c) சித்தம் Nom to வருந்திய. (d) ஆறு Nom (Noun-Subject) to என்=Interrogative Predicate (வினுபயனிலை) (e) உளளம Nom to திருந்தி.

3. மெய்த் தவத்தோன் தேர்ந்து என்னென்றுன். 4. உற்றுலும் either, உற்றுலும் or, என்றும் மொழிபெயர்ககலாம் 5. உரவோன்=ஞானவான்=Sage.

6. ஒத்திருககுமுளளம=சமசித்தை=equanimity. 7. சிததம்வருந்துதல்= repentence, remorse.

8. வெந்துயர்=வேகுந்துயர், வெம்=செம்=சரும்=இவை ஒருகாலத்தில் புடைபெயர்நத வினைப்பகுதிகளாயிருநதன, குறுக்கல் முதலிய விகாரஙகளால்வெம் செம் என நின்றனவாக்கும், மைவிகுதிப்பண்புககள் என்பானேன், ஈறுபோத லாதிவிதிகள் என்னத்துககென்றுர் ஒருவா. உஙகளுக்குத்தமிழ் தெரியாது, எப்ப டியென்றல், அன்ன இனன என்பவை அன்னுகிறேன் இன்னுகிறேன் என்றிருநதன, அவைகள் இப்போழ்துகாணுமற் போயினவாககும, அவற்றது பெயரெசசஙகள் தாம் இவைகள், ஆறு ஆவனறு வென்னுமிடததில், அ என்க ஆ எனக என்றுகிறதென்று ஒருவர் சொன்னுாதலால உஙகளுககொன்றுந தெரியாதென றுர். நாங்கள் பேசாதிருந்ததைத் தமமததிற் குடமபட்டோமாகவுங்கொண்டார்.

VI. அம்பொற் கயிலைககே யாகத் தரவணிவார்
தம்பொற படைக்குத் தமியனு - வெமபியையமுன்
போககினே னெனறுரைததான பூதலதது மீதலததும்
வாககினே ரிலலாத மன.

அம்=அழகு=pretty ;—பொன்=gold or silver ;—கயிலைக்கே=கைலாசத்திற்கே=to Kailas, to the pretty silvery Kailas, the residence of Siva :—ஆகத்தரவணிவார்தம் (ஆகம் + அத்து + அரவு + அணிவார் + தம்)=of him who wears serpents over his body=சிவனுடைய ;—பொற்படைக்கு (பொன் + படைக்கு)=for or on account of (getting) a golden weapon= பொன் ஆயுதத்துக்காக ;—எம்பியை contracted for என்தம்பியை ie அர்ச்சுனனை ;—முன் before, already ;—தமியனு for தமியனுக=ஒண்டியாக alone, lonely without a companion ;—போக்கினேன் = போகச் செய்தேன்=அனுப்பினேன்=I sent ;—என்று=that or thus ;—உரைத்தான்=சொன்னன்= said (he) ;—the main verb agreeing with மன்—பூதலத்தும்=பூதலத்திலும்= in the earth ;—மீதலத்தும்=மீதலத்திலும்=and in the upper world ;—வாக்கில்=சொல்லில்=in word, ie in truth or integrity ;—நேரில்லாத=நிகர் இ

ல்லாத=equal wanting=matchless ;—மன்=அரசன்=the king ie Dharma. Answer of Dharma to Vyasa.

## Syntax.

1. Subj : மன். Predi உரைத்தான்.

2. போக்கினேன் Verb-Predicate, (வினைப்பயனிலை) agrees with நான் understood. எம்பியை=Objective. 3 என்று conjunction *that*, connects போக்கினேன் and உரைத்தான்.

## Outline in question and answer.

இந்தப்பாட்டில் பேசுகிறவர்யார்? தருமர்=மன். எப்படிப்பட்டமன்? இல்லாதமன. என்ன இல்லாதமன்? நோ இலலாதமன். எதிலேநோ? வாக்கிலே நோ. எஙகே? பூதலததும மீதலததும. மன்னன் என்னசெய்தான்? உரைததான். என்ன என்றுரைததான்? போககினேன் என்று. யாரை? எம்பியை. எப்போ? முன். எப்படிபோக்கினேன்? தமியனாய். எதற்காக? பொற்படைக்காக—.யாவர்தமபொற்படை=யாருடையபடை? அணிவார்பொற்படை. எதை அணிவார்? அரவை. எஙகே அணிவார்? ஆகததுஉடம்பிலே. எங்கேபோக்கினேன்? சயிலைககே போககினேன். எப்படிப்பட்ட சயிலை. அமபொறசயிலை.

1. அமபொன்=அம்மையாகிய பொன் என்விரிக்க வேண்டாத பண்புத்தொகை. அம்மை=beauty.

2. சயிலைக்கே போக்கினேன்=கையிலைக்கண் போக்கினேன், dative for locative=ஆதியின் என்றதனால் ஏழாவதற்காகவநத நாலாவது, ஆங்கிலேயபக்ஷம்—.போதல்வருதலாகிய கமனஙகட்கு தமிழ் கூறுநல்லுலகதது வழககியல் நான்காவதே. கைலைபைப்போக்கினேன் எனபது வடமொழியோா பக்ஷம்.

VII. காண்டா வனந்தீக் கடவுளுணக் கைக்கணையா
னீண்ட முகிறடுத்து நின்றாற்கு - மீண்டமரா
தாளிரண்டு நோவத் தனித்தனியே யோடியநாட்
டோளிரண்டு மன்றே துணை.

காண்டாவனம=காண்டாவனத்தை=காண்டாவன மென்னப்பட்ட காட்டை=the forest so called ;—தீககடவுள்=அகனிபகவான்=god of fire ;—உண for உண்ண to eat, to devour, to consume :—கைககணையால்= கையில் (இருநத) அம்பினால்=by means of an arrow which he had in his hand ;—நீண்டமுகில் நீண்டமுகிலை=the clouds that were spread ;—தடுதது=தடைசெய்து=having prevented not to rain or pour down ;—நின்றாற்கு=நின்றவனுக்கு=to him who stood, ie to Arjuna :—மீணடு=having returned ;—அமரர் = தேவாகள் = gods ;—தாளிரணடும = இரணடுபாதஙகளும் =both the feet ;—நோவ=வருநத=வலிக்க=to pain ;—தனிததனியே= அவரவாதன்தன்வழியே=each in his own way—at random—disorderly ;—ஓடியநாள for ஓடினநாளில்=காலததில் ,—தோள இரண்டும்=புசஙகள் இரண்டும = both of

போகுமா=போயிருக்குமா ;—இவ்வளவில் :—காணுங்கொல்=காணுமா = தம யந்தியைக கண்டிருக்குமா ;—இவ்வளவில் ;—காதல்=என் ஆசையை=என் எ ண்ணத்தை ;—இயம்புங்கொல் (அவளுக்கு = அவளிடததில்) = சொல்லுமா= சொல்லியிருக்குமா ;—இவ்வளவில் ;—மீளுங்கொல் = மீளுமா = திரும்புமா= என்னிடததில் திரும்பிவருமா ; —என்றுரையா=என்றுரைத்து (see 24th வினை யியல் Nannul);—விம்மினுன்=தேம்பினுன்=sobbed ;--agrees with அரசு ;— மும்மதம்=மூன்றுமதங்கள்=மூன்று மதஙகளும்=+the three kinds of rut ;— நினறு for நின்றும்=நிலைபெற்றும = though unmanageable ;—ஆளும்=ஆளு கின்ற=தன்னுல் ஆளப்பெற்ற ;—கொல்யானை (attributive to) ;--அரசு= அரச ன், Nom to விம்மினுன் சொல்லே ஐயம் அசை நிலைக்கூற்றே எனபதில் இஙஙனம் ஐயம். 2. செல்லுஙகொல் காணுஙகொல் இயம்புங்கொல் மீளுஙகொல் என்று விம்மினுன் அரசு. This stanza is the soliloquy of Nalan.

XLI. சேவல் குயிறபெடைக்குப் பேசுஞ் சிறுகுரல்கேட்
டாவி யுருகி யழிநதிட்டாள - பூவி
னிடை யனனஞ்செஙகா லிளவனனஞ் சொனன
நடையனனந தனபா னயநது.

சேவல்=ஆண்குயில் Nom to பேசும் ;—குயிற்பெடைக்கு=பெட்டைக் குயிலுக்கு=குயிலோடு=குயிலினிடத்தில் ;—பேசும = பேசிக்கொணடிருக்கு ம் ;--சிறுகுரல்=மெதுவானசததத்தை ;--கேட்டு ;--ஆவி=உயிரானது ;—உரு கி=melting=கரைந்து ;—அழிநதிட்டான் (அழிநது + இட்டான்)= அழிநது போனுன்=swooned ; - - பூவினிடை யன்னம் =Lakshmi-like, in apposition with the next ;—செஙகாலின வன்னம்=red web-footed swan ;—Nom to சொன்ன ;--நடையன்னந தன்பால் = தமயநதியினிடததில் or தமயநதியை ;-- நயந்து=ஒன்றித்து=உள்ளங கூாநது.

1. சேவல்=ஆண் :--ஏறுமேற்றையு மொருத்தலுங்களிறும் சேவும்சேவலு ம் இரலேயும் கலேயுமோத்தையுந் தகருமுதளுமப்பருமபோததுங்கண்டியும் கடுவ னும் பிறவும் யாத்த ஆண்பாற் பெயரெனமொழிப. மரபியல் 2. பெடை= பெட்டை :--பெடையும் பேடையும் பெட்டையும் பெண்ணுமூடுநாகும கட மையு மளகு மந்தியும்பாட்டியும் பிணவும்பிணையும் அந்தஞ்சான்ற பிடியொடு பெண்ணே - மரபியல். 3. சிறுகுரல்=ஆண்பெண் ஏகாநதத்தில பேசும் இரகசி யப்பேச்சின் சத்தம். 4. Nala within himself still.

XLII. அன்ன முரைதத குயிலுக் கலசுவான
மென்மயி றன்றேகை விரிததாட - முனனதனைக்
கண் டாறறுதுள்ளங் கலங்கினுன. காமநோய்
கொண்டாக்கி தன்றே குணம்.

அன்னம் Nom to உரைத்த=சொல்லிய ;—குயிலுக்கு= கோகிலத்துக்கு= குயிலுக்கென்று=on account of Damayanti ;—அலசுவான் = சோம்புவான்=

நளன் ;—மென்மயில்=மெல்லியமயில்=Nom to ஆட ;—தன்தோகை=வால்=வாலை (acc.) ;—விரித்தாட=விரித்து ஆட=ஆடுகிறபோது ;—முன்=தன் முன்னே ;—அதனை=அந்த மயிலை or அந்த ஆட்டத்தை ;—கண்டு=witnessing ;—ஆற்ருது=பொருது=தாளாமல்=envying ;—உள்ளம = இருதயம் ;—loc ;—கலங்கினான்=பேதலித்தான் ie. பேதித்தான்=lost the presence of his mind ;—Now follows a remark of the author—காமநோய்கொண்டார்க்கு இது அன்றே குணம் ! Of course, Nalan cannot come to end of his soliloquy at this rate.

1. அலசுவான் கண்டு கலங்கினான். அலசு=சோம்பு=tend to=to keep thinking. 2. மென்மயில தோகையை விரித்தாட. 3. அதனை (கண்டு) ஆற்ருது கலங்கினான். 4. அலசுவான் உள்ளங்கலங்கினான்.

XLIII. வாரணியுங் கொங்கை மடவார் நுடங்கிடைக்குப்
பேருவமை யாகப் பிறந்துடையீர் - வாரீர்
கொடியார் எனச்செங்கை கூப்பினான் னெஞ்சந்
துடியா நெடிதுயிராச் சோர்ந்து.

வார்=கச்சு (acc) ;—அணியும்=அணிந்த ;—கொங்கை மடவார் Damayanti, 6th case ;—நுடங்கிடைக்கு=நுடங்குகிற (துவளுகிற) இடுப்புக்கு ;—பேருவமையாக=பெரிய உவமானமாக (comparison) ;—பிறந்துடையீர்=பிறந்து உடையீர்= பிறந்திருக்கிறீர்கள் ;—வாரீர் = வம்மின் = வாருங்கள்=come ye (2nd Pers. Plural Imperative or Optative) ;—கொடியார் for கொடியாரே =கொடியீரே=கொடிகளே=creepers (voc) ;—என for என்று ;—செங்கை=செம்மை + கை=செவ்வாந்தைகளை ;—கூப்பினான்=குவித்தான் = கும்பிட்டான், Nom to நளன் understood ;—நெஞ்சம்=மனமானது ;—துடியா=துடித்து =பதைத்து ;—நெடிதுயிரா=நெடிதுlong + உயிர்த்து breathing=sighing ;—சோர்ந்து=வாடி.

1. உடையீர்=உளீர்=*having* and *being* are interchangeable in compounds. 2. கொடியார் for கொடிகள் : honorific form in a neuter word : see 28th Sut. பொதுவியல் Nannul.

XLIV. கொங்கை யிளநீரால் குளிர்ந்தவிளஞ் சொற்கரும்பால்
பொங்கு சுழியென்னும் பூந்தடத்தின் - மங்கைநுங்
கொய்தாம வாசக் குழலிழந்தி ழூந்தேனே
வெய்தாமக் காம விடாய்.

கொங்கைஇள நீரால்=கொங்கைகளாகிய இளநீர்களால் = tender coconuts ;—குளிர்ந்த + இளம் + சொல் + கரும்பால்= குளிர்ந்திருக்கிற இளமையாகி (tender) ய சொல்லாகிய (her speech or conversation) கரும்பினால் (sugar cane) ;—பொங்கு சுழியென்னும்=பொங்குகின்ற beautiful+ சுழி navel+ என்கிற called (connecting சுழி and தடத்தில்) ;—பூந்தடத்தின் = பூத்தடாகத்

தில் ;—மங்கை=மங்கையினுடைய=of Damayanti ;—நறும்=நல்ல (from நறுமை) ;—கொய்,கொய்த=கிள்ளின=ஆய்ந்த ;—தாம for தாமம்=wreath ;—வாசக்குழனிழற்கீழ்=வாசனைபொருந்திய கூந்தலது நிழலின்கீழே ;—ஆறேனோ=அடங்கேனோ may I not rest, be quenched ;—வெய்தாம்=வெய்யது ஆகும ஆகிய ;—அக்காமவிடாய்=அந்த இச்சை விடாயானது=thirsting.

1. நீரால் விடாய் ஆறேனோ. சொற்கரும்பால் விடாய் ஆறேனோ. பூந்தடத்தில் விடாய் ஆறேனோ. குழல்நிழற்கீழ் விடாய் ஆறேனோ. நான்=தோன்றா எழுவாய். 2. நான்விடாயாறினேன், பசியாறினேன, தாகந்தீர்ந்தேன் முதலியவற்றிற்கு விரிசெய்யவேண்டுமானால் விடாயை ஆறக்கொண்டேன்=விடாயைக் கொண்டேன் என்று ஆறுவெனனெச்சத்திற்கு எழுவாயில்லாமல் வாக்கியம் அழகுபடாமையின், விடாய் ஆறககொணடேனென்க. 3. ஆறேனோ Interrogative for Optative=*May* I not.

XLV. மன்னன விடுத்த வடிவிற் றிகழுகின்ற
அன்னமபோய்க் கன்னி யருகணைய - நன்னுதலும்
தன்னாடல விடுத்த் தனியிடஞ்சோந் தாங்கனை
யெனனாடல் சொல்லென்றாள் ஈங்கு.

மன்னன் ;—விடுத்த=அனுப்பின ;—வடிவில் = ரூபத்தில்=in the shape or attire (it started from Nalan) ;—திகழ்கின்ற=பிரகாசிக்கிற ;—அன்னம போய ;—கன்னியருகு=கன்னியின் அருகே=at or near ;—அணைய=சேர=to arrive=சேர்ந்தபோது ;—நன்னுதலும் (நல் + நுதல் + உம)= Damayanti ;—தன ஆடல்விட்டு=தன்னுடைய விளையாட்டை ஒழிந்து ;—தனி இடம்சேர்ந்து=ஏகாந்தமான ஸ்தானததை உற்று ;—ஆங்கு=அங்கே ;—என் ஆடல் (ஆடல்=சொல்=செய்தி=news) என்ன செயதி ;—சொல= tell;—என்றாள்=asked ;—ஈங்கு= here, now. அன்னம் போய்க்கன்னி அருகணைய நன்னுதல் ஆடல்விட்டு அதனை, என் ஆடல சொல் என்றாள.

XLVI. செம்மனத்தான றண்ணளியன செங்கோலான் மங்கையர்க
டமமனத்தை வாங்குந் தடந்தோளான - மெய்யமை
நளனென்பான மேனிலத்து நானிலதது மிக்கா
னுளனென்பான வேந்த னுனக்கு.

செம்மனத்தன்=செவ்விய மனத்தன்=good natured ;—தண் அளியன்=குளிர்ந்தகிருபையன் ;—செங்கோலான்=நீதியுடையோன் ;—மஙகையர்கள் தம் மனத்தைவாங்கும் தடமதோளான் = மகாரூபவான் என்றபடி ;—மெய்ம்மை= true, believe me ;—நளன் என்பான் = நளன் என்பவன் ;—மேல்நிலத்தும்= மேலுலகத்திலும் ;—நானிலத்தும் (நால் for நாலு=நாலுகின்ற = hanging, suspended=floating + நிலத்தும்) பூமியிலும் ;—மிக்கானுள னென்பான்=(மிகுந்தான்) பெரியவனுயிருக்கிறவன் (சக்கிரவர்த்தி) என்னப்பட்டவன ;—வேந்தன் =அரசன் ;—உனக்கு நளன் என்பான் வேந்தன் உனக்கு=Nalan is your king ie. consort. From 45th stanza, Swans' conversation with Damayanti.

செம்மனத்தன் முதலிய ஐந்தும் நளனென்பாற்கு விசேஷணம். குறிப்பு வினைகளுமாதலால செம்மனத்தான் ஆயிருக்கிறான் என்று முற்றுவினைப்பொருளாக் கியுங்கொள்ளலாம்.

XLVII. அறங்கிடந்த நெஞ்சு மருளொழுகு கண்ணு
மறங்கிடந்த திண்டோள் வலியுந - திறங்கிடந்த
செங்கண்மா லல்லனேற் றேர்வேந்த ரொப்பரோ
வங்கணமா ஞாலத் தவற்கு.

அறம்=தருமம் Nom to கிடந்த=இருக்கிற ;—நெஞ்சம்=இருதயமும் ;—அருள்=கடாக்ஷம்=கண்ணோட்டம், தாக்ஷிண்ணியம்,தயை=condescension ;—ஒழுகு=ஒழுகுகிற=full, pouring ;—கண்ணும் ;—மறங்கிடந்த திண்டோள்வலியும=வல்லமை வீற்றிருக்கின்ற திண்ணிய புசஙகளின் உறுதியும் ;—திறங்கிடந்த=உரிமைதஙகிய=இவ்வுரிமைகள்பொருந்திய ;—செஙகண்மால்=செந்தாமரைக்கண்களையுடையா னென்னபபட்ட விஷ்ணுவானவர், Nom to அல்லனேல்=அல்லனேயானால் ;—தோவேநதர் ;—ஒப்பரோ=நேர்வரோ=சமானமாவாரோ(ஆகார்கள என்றபடி) ;—அஙகண்மா ஞாலத்து=அழகிய இடமாகிய பெரிய நால்நிலததில் ;—(ஞாலுதல்=நாலுதல்) ;— அவற்கு = அவனுக்கு= to him or with him. நெஞ்சும கணணும் வலியுந் தேர்வேந்தர் ஒப்பரோ அவற்கு=அவற்கு நெஞ்சு ஒப்பரோ கணணொபபரோ வலி ஒப்பரோ என்றுகொண்டு நெஞ்சில் நெஞ்சால் ஒப்பரோ எனமுடிக்க. இஃது உம மேலேபசிவிடாய் முதலிய வற்றிற்குக் காட்டிய வண்ணமே. இவன் எனக்கு மனமொத்தானெனகிற வழக்கியலானுங் காண்க. எதிர்மறைவிடை. see 34th and 35th Sutrams, பொதுவியல், Nunnul.

XLVIII. புளளின் மொழியினொடு பூவாளி தன்னுடைய
வுளளஙகவர வொளி யிழநத - வெள்ளை
மதி யிருநததாமெனன வாயநதிருநதாள் வண்டின்
பொதியிருநத மெல்லோதிப பொன்.

புள்ளின்=பறவையின்=அன்னததின்=மொழியினொடு = சொல்லோடு=செய்தியுடனே கூட ;—பூவாளி=புஷ்பபாணமானது Nom to கவர ;—தன்னுடைய=her ;—உள்ளம் = உள்ளத்தை=heart ;—கவர =கிரகிக்க = இழுத்துக்கொண்டபடியால் ;—ஒளியிழந்த = காந்திபோகிய ;— வெள்ளைமதி = white moon, Nom to இருந்ததாமென்ன + (இருந்தது + ஆம் + என்ன)=that it was or as if it was ;—வாய்ந்திருந்தாள்=கொண்டிருந்தாள்=had, or assumed ;—வண்டின்=வண்டுகளது ;—பொதி—கூட்டம் swarm ;—Nom to இருந்த=that resided ;—மெல்லோதி=மெல்லிய மயிரை யுடைய ;—பொன் = gold for Damayanti.

1. பொன் வாய்ந்திருந்தாள். 2. ஒளி இழந்தவெள்ளைமதி இருந்ததாம் என்ன=so that it may be said of her=Attributive phrase qualifying வாய்ந்திருந்தாள். 3. Object வெண்ணிறத்தை.

XLIX. மன்னன் மனத்தெழுந்த மையனோ யத்தனையு
மன்ன முனைக்க வக்குருகி - முன்ன
முயங்கினாள் போறறன் முலைமுகத்தைப பாரா
மயங்கினு ளென்செய்வாண் மற்று.

மன்னனுடைய மனதிலே எழுந்த காமநோயாகிய அத்தனையையும் அன்னமானது சொல்ல (க்கேட்டு) (தானும்) நெஞ்சினகி (த்தனைக்கட்டி) ஆலிங்கனஞ்செயதான்போல் தன்முலைமுகத்தைபபாராது மயங்கினவள் ஆனாள். Authors' remark=என்னசெய்வாள் வேறு. This is what the Love Science terms பெண்பாற் கைக்கிளை. See 42nd stanza before, for ஆண்பாற் கூற்றுக்கைக்கிளை. 1. மொழியினேடும், உம்மைதொக்கது = மொழிதலு மென்னுங் காலங்கண்ணியமரபிற்செயதென் னெச்சத்தின் பொருளது, மொழியினேடும் பூவாளியானதுகவர.

L. வாவி யுறையு மடவனமே யென்னுடைய
வாவியுவர தளித்தா யாநியாற - காவினிடைத்
தேர்வேநதற கெனனிலைமை செனறுரைததி யென்றுரைத்தாள்
பார்வேநதன் பாவை பதைத்து.

வாவி=குளம் = தடாகம் (locative);—உறையும்=Fut-Rel-Part;—மட அனமே=Adjective and noun;—என்னுடைய ஆவி=6th விரி, and 2nd தொகை;—உவநது=Past Part;—அளித்தாய்=Inflectional noun 2nd pers sing=அளித்தாயாக அளித்த அன்னமாக;—ஆதி=ஆகுதி=ஆ = ஆகு = Imperative (அளித்தாயாதி=அளிததததாக ஆகு);—ஆல் = particle;—காவினிடை (கா+இன் + இடை = உருபு புணாசசி) 7th expressed;— தேர் வேந்தற்கு=4th or Dative;—என்னிலைமை= என்னுடைய நிலைமையை (acc. understood);—சென்று உரைத்தி=போய்ச்சொல்லு (செய்தென்னெச்சத் தொடர்=Past Participle and முடிக்கும்வினை);—என்று=Conj *that*;—உரைததாள் = முற்று வினைப் பயனிலை;—(யாவளென்னில்);—பார்வேந்தன்=genitive;—பாவை=picture =portrait, ie. Damayanti=Nom to உரைத்தாள்;—பதைதது=துடித்து=Past Part; as பதைத் துரைத்தாள்.

1. உரைத்தி = சொல்லுதி = சொல்லுகிறாய் or சொல்லு 2nd person sing. Damayanti requests the Swan to go to Nala to tell him of her soliloquy. பார்வேந்தன் here, the father of Damayanti.

LI. மன்னன் புயநின் வனமுலைக்குக் கசசாகு
மென்ன முயங்குவிப்பே னென்றனனம் - பின்னும்
பொருந்தவனபா லோதிமலர்ப் பூங்கணைகள் பாய
விருநத வன்பாற் போன தெழுந்து.

அரசனுடைய தோள்கள் உன் அழகுமுலைக்கு ரவிக்கை ஆகும் என்னும்படியாகக் கூட்டுவிப்பேன் (சேர்ப்பிப்பேன்) யான் என்று (சொல்லி);—மேலும் (அவனுக்குமனம்) அமர பிரீதியினுல் (சொல்லுவனவற்றை) சொல்லிவிட்டு, அழகி

ய புஷ்பபாணங்கள் (தன்மேல் வந்துபட) இருந்தவனாகிய நளனிடத்தில் போயிற்ப (பறந்) தெழும்பி - எறு The swan returns to Nala.

LII. கொற்றவன்றன் றேவிக்குக் கோமகடன் றோழியர்க
ளுற்றதறியா வுள நடுங்கிப - பொறறொடிக்கு
வேறுபா டுண்டென்றார் வேந்தனுக்கு மற்றதனைக்
கூறினாள் பெற்ற கொடி.

கொற்றவனுடைய தேவியாகிய இராணிக்கு, இராஜகுமாரத்தியாகிய தமயந்தியினுடைய தாதியாகள், அவளுக்குச் சம்பவித்ததை அறியாமல், பயந்து (உளம் நடுங்கி), பொற்றொடித் தமயந்திக்கு (யாதோ) விபரீதமுண்டா யிருக்கிறதென்றார்கள். இதை (மற்றதனை) வீமனுக்குச் சொன்னாள், தமயந்தியைப்பெற்ற கொடியாகிய தாயாரானவள் எறு. 1. உளம் நடுங்கி=உள்ளத்துள் நடுங்கி. 2. உளமானது நடுங்கித் தோழியர்கள் என்றார்கள். 3. வேறுபாடு உண்டு= இடைப்பிறவால். 4. தேவிக்குத்தோழியர் என்றார் ;—வேந்தனுக்கு பெற்றகொடி கூறினாள்.

LIII. கருங்குழலார் செங்கையினால் வெண்கவரிப் பைங்கான்
மருங்குலவு வார்முரச மார்ப்ப - நெருங்கு
புரிவளைகள் றேங்கப் போய்ப்புக்கான் பெற்ற
வரிவளைக்கை நல்லாண் மனை.

The father Bhima comes to see her daughter into her room. கரியகூந்தலுடையோர் தோழிமார், தங்கள் செங்கைகளால போடப்பட்ட வெள்ளைச்சாமரைகளது சிறுகாற்றானது, தன் (மருங்கு) மேல்வீசவும், வாகள்கட்டிய பேரிகைகள் முழங்கவும், நெருங்கிய முறுக்குகளுடைய சங்குகள் நின்றுகோஷிக்கவும் ஆக, போய்ப்புகுந்தான ; தான்பெற்ற-கீற்றுகள்பொருந்திய வளையல்களை யணிந்த பெண் (நல்லாளுடைய) ணினுடைய அறைவீட்டிற்குள், என்றவாறு.

1. செங்கையினால், கால் உலவ - முரசம் ஆர்ப்ப - வளை எங்க. நின்று=ஊதுவோர் நின்று ஊத, எனப்பிற பிறகர்த்தாக்களாய்க் கொள்ளினும் ஆம். சங்குகள் நிற்கமாட்டாமையின் நின்று ஊதுவோர் எங்க. போய்ப்புக்கான் வீமன், மனை=எ - ஒது தொகை.

LIV. கோதைசுமந்த கொடிபோ லிடை நுடங்கத்
தாதை திருவடிமேற் றான்வீழ்ந்தாண - மீதெல்லாங்
காந்தாரம் பாடிக் களிவண்டு நின்றரற்றும
பூந்தார மெல்லோதிப் பொன்.

மாலைகளைத் தாங்கினகொடியேபோல் இடுப்புத் துவண்டசையத்தந்தையது ஸ்ரீபாதத்தின்மேல் தானேசாஷ்டாங்கஞ் செய்தாள், மேல் எங்கும் காந்தார (சுரங்கள் மிகுந்தபண்கள் போலும் பண்களைப்) பாடிக்கொண்டு தேன்வண்டுகள் இருந்து (விண்ணெனன்றும் தெந்தெனன்றும்) கூவுகின்ற பூமாலைகளையுடைய அழகிய மிருதுவான தலைமயிரையுடைய பொன்னொப்பாள் தமயந்தியானவள் எறு.

1. மெல்லோதிப் பொன் வீழ்ந்தாள். 2. வண்டுபொடிநின்று அரற்று மெல்லோதி. 3. நுடங்கவீழ்ந்தாள். 4. காந்தாரம் ;—ஷட்ஜம் ரிஷபம் காந்தாரம் மத்தியமம் பஞ்சமம் தைவதம்நிஷாதம் என்னும் இவற்றுள் காந்தார சுரங்களே அதிமிசிரமாய்ச் செய்யுங்கீதங்கள் விசேஷமென்பர் சங்கீத சாஸ்திரகாரர், ரிஷபம் வண்டுமுதலிய செந்துக்களது சத்தங்களைப் பிடித்துச் செய்கை செய்தல் திவ்வியம் என்னுங்கொள்கை யோராதலின். 5. பொன், தமயந்திக்கு ஆகுபெயர்.

LV. பேரழகு சோர்கின்ற தென்னப் பிறைநுதனமே
னீரரும்பத் தனபேதை நின்றாளைப் - பாராக்
குலவேந்தன் சிந்தித்தான கோவேந்தா தம்மை
மலர்வெய்ந்து கொள்ளு மணம்.

பெரியஅழகுதானே வடிகின்ற தொப்ப (என்ன= ஒப்புருபு= உவமவுருபு) மூன்றாம்பிறை யொத்தநெற்றியின் மேல் நீர்த்துளி (வெயர்வை) உண்டாக (பொடிக்க) தன்மகள் நின்றதைப் பார்த்துநல்ல (சூரிய) குலத்திலுதித்த வீமன் யோசித்தான், எதையென்னில், ஆண்டன்மை பொருந்திய அரசர்களை (அரசரில் ஒருவனை) மாலைசூட்டிப்பிறகு செய்துகொள்ளும் படியான கலியாணத்தை எறு. 1. தன்பேதை நின்றாளை= தன்பேதை நின்றதை or நின்றாள் தனபேதையை. 2 வேந்தர்தம்மை= அநேகரை மணத்தல் ஆகாமையின், வேந்தருள் ஒருவர்தம்மையென்க. 3 மணஞ் சிந்தித்தான். Bhima now thinks that his daughter should be married.

LVI. மங்கை சுயம்வரநா ளாமென்று வார்முரச
மெங்கு மறைகென றியம்பினன - பைங்கமுகின்
கூந்தன்மேற் கங்கைக கொழுநதோடு நனளுடன
வேந்தர்மேற் றூதோட விட்டு.

மங்கையாகிய தமயந்தி (யின்) க்குச்சுயம்வரம் நாட்டும் நாள் ஏழு என்று கூறி, வார்கள் இறுகிய பேரிகையை எங்கணும் அடிக்க (அடியுங்கள்) என்றுகட்டளை யிட்டான், பசிய பாக்குமரத்தின் கூந்தலின்மேல் நீர்த்துளிகள் ஓடுகின்ற விதர்ப்ப தேசத்தரசன் வீமன் இராசாக்களிடத்திற்குத் தூதர்களைப் போகச்செய்து, என்றவாறு.

1. நீவிர் அறைக= வியங்கோள் ஐம்பால் மூவிடங்களுக்கும்பொது. எல்லாப்பாலையும் எல்லா இடத்தையுங் கொள்ளுதலால் வியம் (விஸ்தாரம்) கோள் என்னப்பட்டது. முன்னிலையோரைப் பெரிதுசெய்து கோடலா (optative) லும் அப்பெயர் பெற்றதென்பர். 2. உலகவழக்கில் or வழக்கநடையில், வாரும் வாருங்கள் என்பனவும் இவ்வியங்கோளெனக்கொள்க. 3. தூதை ஓட விட்டு முரசம் அறைகென்றான்= தூதை ஓடவிடுக என்றும் முரசத்தை அறைகவென்றும் ஆம், தான் தூதோட விட்டுப்பிறகு அறைகென்றான் எனினும் ஆம்.

LVII. மாமுத்த வெண்குடையான் மால்களிறுரன் வண்டிரைக்குந
தாமத தரிச்சந்திரன சுவர்க்கி - நாமத்தா
பாவேய்ந்த செந்தமிழா மென்னப பரநதே
கோவேந்தர் செலவக குழாம.

மகத்தாகிய முத்துக்கள் இழைத்த வெள்ளைக்குடையோனாகிய, பெரியபட்டத்தியானை யுடையோனாகிய, வண்டுகள் ஒலிக்கின்ற மாலையணிந்த அரிச்சந்திரன் சுவர்க்கியினது பெயாமாலையாகிய பாவினங்கள் பொருந்திய செந்தமிழ் ஆம் என்னும்படியாக (கோவேந்தர் செல்வக்குழாம்) செல்வக்கோ வேந்தரது கூட்டமெங்கும், (பறையறை=முரசறை) பரம்பிற்று என்றவாறு.

1. நாமத்தார்=பெயர்மாலை : பிரபுவின் பெயரை ஒவ்வொருகவியிலும்வைத்துப் பாடிய பாட்டு. நாமத்தார் ஆகிய செந்தமிழ் ஆம் இந்த முரசறை என்ன. சுவர்க்கிப்பிரபுவின் நாமத்தாரானது எங்குந்தெரிந்திருக்கிறது போல, பீமன அறைவித்த தமயந்தியின் சுயம்வரத்து முரசறையும் எங்கும் எட்டிற்று.

LVIII. செந்தடையும வண்டுறைதார் செயயாள் வளர்மாாபனா
கந்தடையும வேழக் கடைத்தலைவாய - வந்தடைந்த
பூவேந்தர் தங்களகிளை பொன்னகரி வீமனடிறறே
கோவேந்தன மாதைக் குறித்து.

செவ்விய கவசமும், வண்டுகள் வசிக்கும் மாலையும், இட்சுமியும் இருக்கின்றமார்பனுடைய, கம்பத்தைப்பொருந்தும் யானைத்தலைக்கடைவாயில் (வாய்=ஏழனுருபு) வந்துசேர்ந்த பூமியாளரசாகளுடைய, சுற்றங்கள் அழகிய வீமனுடைய நகரத்தில் கூடின, (கோவேந்தன்) வீமனுடைய பெண்ணைக் கருதி என்றவாறு.

1. கிளை, மாதைக் குறித்து ஈண்டிற்று. 2 தடையும தாருமசெய்யாளுமவளர் மாாபன் 3 மாாபன் கடைத்தலைவாய். 4. கந்துஅடையும் வேழக்கடைத்தலைவாய் 5. கடைத்தலைவாய் வந்தடைந்த வேந்தர்கிளை.

LIX. புள்ளுறையுஞ் சோலைகளும பூங்கமல வாவிகளு
முள்ளும் புறம்பினி துறைந்தார் - தெள்ளரிகட
பூமகளைப் பொனனைப் பொருவேலவிதாப்பன றன
கோமகளைத தமமனததே கொண்டு.

(அந்த அரசர்) தெளிவான வரிகள் (பொருதிய) கண்களை யுடைய (பூமகளைப்பொன்னைக் கோமகளை) இலட்சுமி போன்ற அழகிய, போர்செயயும் வேலாயுதங்கொண்ட, விதர்ப்பனுடைய இராஜபுத்திரியை (royal daughter) தத்தங்கள்தங்கள் உள்ளத்திலே] உததேசித்துககொணடு, பறவைகள வசிக்கும் சோலைகளிலும் தாமரைத்தடாகங்களிலும் உள்ளிடங்களிலும் புறத்திடங்களிலும் சந்தோஷமாகத் தங்கியிருந்தார்கள்.

1. இனிதுறைந்தார் - பெரிது செய்தார் - முதலியவற்றை வினையுரித்தொடர்கள்என்க. குறிப்புமுற்றேவினையெச்சம. வினையெச்சங்கள் பெரும்பாலும வி

னையுரிநீர்மையன மேலே காட்டப்பட்டது. 2. இனி றுறைந்தார்=Predicate. Subject அரசர் understood. Object பூமகளை பொன்னை கோமகளை in apposition, governed by கொண்டு=கொண்டு உறைந்தார்.

LX. வழிமேல் விழிவைத்து வாணுதலா ளும
மொழிமேற் செவிவைத்து மோகச் - சுழிமேற்ற
னெஞ்சோட வைத்தயாவான கண்டானெடு வானின்
மஞ்சோட வனனம் வர.

Nala sees the Swan returning to him. பாதையின்மேலே தன் கண்களை வைத்துக்கொண்டு (நோக்கிக்கொண டென்கிறபடி) ஒளிாகின்ற நெற்றியுடைய தமயந்தியின் பெயராகிய சொல்லின்மேலே (சொல்லினிடததிலே) தன்காதை (ச்செலுத்தி) ச்சாய்த்துக்கொண்டு, காமமாகிய நீர்ச்சுழலிலேதன் மனம் ஓடும்படி விட்டுத் தளர்ந்திருக்கிறவனாகிய நளன் கண்டான், விரிந்த வானத்தில் மேகம் பெயர (மேகத்தோட) அன்னமானது (வர) திரும்பி வருதலை, எறு. 1. மஞ்சோட அன்னம்வர=மேகத்துடனே கூட அவ்வன்னம்வர. 2. விழிவைத்து செவிவைத்து நெஞ்சோடவைத்து அயர்வான் கண்டான் அன்னம்வர.

LXI. முகம்பார்த் தருகுணுக்கி முன்னிரநது செல்வ
ரகம்பார்க்கு மறறோரைப் போல - மிகுங்காதல்
கேளா விருந்திட்டா னன்னதனைக கேளாரை
வாளால் விருநதிட்ட மன்.

முகத்தைப்பார்த்து ஈகையைக் கண்ணோக்கி எதிரே (இரந்து) சென்று or வங்கி தனவான்களுடைய வீட்டை (மனத்தை=நோக்கத்தை=சாடையை) பார்க்கும் இல்லாதாரை (அற்றோரை) ப்போல், தன் மிகுங்காதலாகிய தமயநதி சம்மதியைக் குறித்து (அவாமிகுதியால்) அன்னததைக் கேளாதிருநதான், யாவன்? சத்துருக்களை வாளாயுதத்தினால் பருநது முதலிய வற்றிற்கு விருந்தாக (உணவாக) இட்ட மன்னன்=நளன் எறு. 1. கேளா இருந்தான் = கேட்டிருந்தான் என்றும்வரும். 2. கோளாரை வாளால் விருந்திட்டமன் அன்னத்தைக் கேளா இருந்திட்டான்.

LXII. அன்னக் குலத்தி னரசே யழிகின்ற
வென்னுயிரைமீள வெனக் களித்தாய் - முன்னுரைத்த
தேமொழிக்குத் தீதிலவே யென்றான திருநதாரை
யேமொழிக்கும் வேலா னெடுதது.

அம்சங்களின் கூட்டத்திற்கு (அரசே) சிரேஷ்டமே, (Voc.) அவலிக்கின்ற (தவிக்கின்ற) என் ஆவியைத் திரும்பவும் எனக்கு மீட்டுத்தந்தாய், (உன்னைக்கண்டதே என் ஆவிதிடப்பட்டதென்றபடி) முன்னே நீசொல்லி (ப்போன) தேன்மொழியாளாகிய தமயந்திக்குப்பொலலாங் கில்லையே யென்று கேட்டான், சத்துருக்களை கருவம் (எம்) போக்கும் வேலாயுதமுடைய நளன் எடுத்தென்றவாறு. 1. வேலான் எடுத்து என்றான். 2. தேமொழிக்குத் தீதிலவே யென்றான். 3. இவ்

வகைக் கேள்வி, குசலப்பிரசினே, சமஸ்கிருதநடை. வலியளா வெனவும் கேட்கப்படுவெதுணடு. Nalan enquires the swan how Damayanti is.

LXIII. கொற்றவன்ற னேவலினுற் போயக்குலக் கொடிபா
லுற்றதுவுமாங் கவடா னுற்றதுவு - முற்று
மொழிந்ததே யன்ன மொழிகேட் டரசற்
கழிந்ததே யுள்ள வறிவு.

செயம்பொருந்தியவனுகிய நளனுடைய கட்டளேயினுல் போய் அந்த (குலக்கொடி) தமயந்தியினிடத்தில் சேர்ந்ததையும், அங்கே அவளும்பொருந்தின சங்கதியையும் எல்லாவற்றையும் சொல்லிற்று அன்னமானது, இவ்வார்த்தையைக் கேட்டு, இராசனுக்கு (நளனுக்கு) அழிந்தது உண்டாயிருந்த அறிவு (பிரஜ்ஞை) எறு 1. அன்னம் உற்றதுவும் உற்றதுவும் மொழிந்தது. 2. அரசற்கு அறிவு கெட்டது. 3. உற்றது = arrival. 4. உற்றது = what she fared or what happened to her.

LXIV. கேட்ட செவிவழியே கேளா துணாவோட
வோட்டை மனத்தோ டுயிர்தாங்கி - மீட்டுங்
குழியிற் படுகரிபோற் கோமான் கிடந்தான
றழலிற் படுதளிர்போற் சாய்ந்து.

கேட்ட=கேள்வியையேற்ற=சிரவணஞ்செய்த ;—செவிவழியே=காதின் வழியே = வழியாக = வழியாலே;— கேளாது = கேளாமலே = சொல்லாமலே ;—உணர்வுஓட = அறிவுஓடிப்போக ; — ஓட்டைமனத்தோ டுயிர்தாங்கி= உடைந்த, பொத்துப்போன, சில்லியாயின, தளாந்துபோன, மனத்துடனே ;— உயிரை ;—சீவனே ;—தாங்கிக்கொண்டு ;—மீட்டும்= மேலும்=மறுபடியும் ;— குழியில்=பள்ளத்தில்=படுகுழியில் ; —படு=பட்ட=விழுந்த ;—கரிபோல்= யானே என்ன : —கோமான்கிடந்தான் ;—தழலில்=நெருப்பில் ;—படு=பட்ட = அகப்பட்ட ;—தளிர்போல் = இளந்தளிர்என்ன ;—சாய்ந்து = வீழ்ந்து. Outline. உணர்வுஓட உயிர்தாங்கி மீட்டும், படுகரிபோல் படுதளிர்போல் சாய்ந்து கோமான்கிடந்தான். 1. ஓட்டை=cracked. 2. படுகுழி= pitfall.

LXV. கோதை சுயம்வரநாள் கொற்றவனுக் கூற்றுணாப்ப
வேதமிலாக் காட்சியர்வந் தெய்தினா - போதிற
பெடையோடு வண்டுறங்கும் பேரொலிநீர் நாட
னடையாத வாயி லகம்.

கோதை = கோதையினுடைய ;—சுயம்வரநாள் = சுயம்வரநாளே = ஸ்வயமேவரிக்கின்றநாளே ;—கொற்றவனுக்கு = நளனுக்கு ,—உற்றுணாப்ப = நன்றுய்ச்சொல்ல = தெரிவிக்க to give notice ;—ஏதமிலா=குற்றமற்ற=அறிக்கை செய்தலில்திறமையில்லாமை இல்லாத ;—காட்சியர் = அறிவினா=அனுபவந்தெரிந்த தூதா ;—வந்தெய்தினா ;— எங்கேயென்றுல் ;—போதில் = புஷ

பங்களில் ;—பெடையோடு = பெண்வண்டுடனே ;—வண்டு = ஆண்வண்டா னது ;—உறங்கும்=தூங்கும் ;—பேரொலி=பெருஞ்சத்தம்= மகாகோஷம் செய்கின்ற ;—நீர்நாடன்=தண்ணீர்பாய்கின்ற நாடனாகிய நளனுடைய ;—அடையாத=சாத்தாத= மூடாத ;—வாயிலகம்= வாயிலினிடத்தில். 1. உற்றுரைப்பக் காட்சியர்வந்தெய்தினார் பேரொலிநீர்நாடன் வாயிலகம். 2. பெடையோடுவண்டுறங்கும் பேரொலிநீர். 3. கோதையினதுசுயம்வரநாளை உற்றுரைப்ப. 4காட்சி =*sight*, hence, *experience*.

LXVI. காவலன் றன்றூதர் கடைக்காவலர்க் கறிவித்
தேவலிற்போ யீதென் றியம்புதலு - மாவிற
பொலிந்ததேர் பூட்டென்றான் பூவாளி பாய
மெலிந்த தோள்வேந்தன் விரைந்து.

காவலனுடைய (அரசனுடைய, பீமனுடைய) தூதாட்கள் வாயில் காப்பாளர்க்கு அறிவித்து, கட்டளையினால் (உள்ளிருந்து கட்டளை பிறந்து வந்ததின்பேரில் (உள்ளே) சென்று, இன்னது செய்தியென்று சொன்னவுடனே, பிரகாசிக்கின்ற குதிரையின்தேர் (ஐ) பூட்டு (கட்டு) என்றான், புஷ்ப பாணமானதுபட (பட்டதனால்) வாடிப்போன புசங்களையுடைய வேந்தன் சீக்கிரமாய். 1. சீக்கிரம் பூட்டென்றான். 2. தேர்பூட்டென்றான். 3. பூவாளிபாய மெலிந்ததோள் = பூவாளிபாய்ந்து மெலிந்ததோள். 4. ஈதென்றியம்புதலும்=ஈதென்பதை=சுயம்வரநாளின் செய்தியை. 5. மாவின்தோ= குதிரைவண்டியென்பதுபோலும். 6. கடை= தலைக்கடை=gate.

LXVII. கெட்ட சிறுமருங்குற் கிழ்மகளிர் நீள்வரம்பி
லிட்ட பசுநகுவளை யேரடிகத - கட்டி
கரையத்தே னூறுங் கடனாடனூர்க்கு
விரையத்தே ரூரென்றான் வேந்து.

Nalan proceeds to the ceremony of Damayantis' Swayamvaram. கெட்ட =இல்லையென்னும் படியாகப் போயின ;—சிறுமருங்குல் = அவ்வளவு நுண்ணிய இடைகளையுடைய ;—கிழ்மகளிர் = பறையர் பள்ளர்களுடைய ஸ்திரீகள் (nom to இட்ட) ;—நீள்வரம்பில் = நீளமானவரப்புக்களில் ;— இட்டபசுங்குவளை=போட்டபசிய நீலமலர்களானவை (nom to ஊறும்) ;—ஏரடித்தகட்டி (மண்கட்டிகள்) கரைய ;—தேனூறும் (a compound active verb)=தேனை யூற்றும் ;—கடனாடனூர்க்கு=கடற்கரை நாடனுடைய (பீமனுடைய) ஊருக்கு ;—விரைய=கடுக=சீக்கிரமாக ;—தேர்ஊர் = தேரையோட்டு ;— என்றான்வேந்து.
1. விரைய = Infinitive adverbial. 2. வேந்துதேர்ஊரென்றான்.

## Paraphrase.

குன்றிய நுண்ணிய இடையுள்ள அடிமை (முறிச்சியர்)ப் பெண்கள் நீண்ட வரப்புகளிலே எறிந்துபோட்ட (or போட்டு வைத்த) நீலோற்பலங்கள் (nom to தேனூறும்) கலப்பையுழுத மண்கட்டிகள் கரையும்படியாகத் தேனூறுகின்ற நெய்தல் நிலத்தவனுடைய ஊருக்குத்துவரிதமாய்த்தேரோட்டென்றான் நளன் என்று.

LXVIII. சடைச் செந்நெல் பொன்விளைக்குந் தன்னாடுபின்னாக்
கடற்றானை முன்னாகக் கண்டா - னடறகமைந்த
வில்லியரும் பொற்றும வீமன் றிருமகளா
நல் லுயிரும வாழு நகர்.

சடை சடையாகப் பிடித்திருக்குஞ் செந்நெல்லானது, பொன்னை விளையச் செய்கின்ற தன்னுடைய (நளனுடைய) நிடதநாடு பின்னதாகததன் சேனாசமுத்திரமானது முன்னதாக நோக்கினான், எதனையெனில்? —வீரத்திற் கென்று சமைந்த (பிறந்த) வில்லாளிகளும், பொன்மாலை யணிகின்ற வீமனுடைய இலக்ஷ்மியாகிய தன்னுடைய நல்ல உயிரும் (his dear life, ie. his sweet heart) வாழ்கின்ற நகரத்தை. எறு.

1. சடைச்செந்நெல் Nom to விளைக்கும் governing பொன். 2. விளைக்குந்தன்னாடு nom to பின் ஆக. 3. கடற்றானை nom to முன்னாக. 4. ஆக ஆக ககண்டான் நகர் (ஐ). 5. வில்லியரும் and நல்லுயிரும் nom to வாழும் (பெயரெச்சம்). 6. அந்த நகரம் குண்டினபுரம். 7. பொற்றுமம் ;—மேலைப் பாட்டுக்களிலும் பின்வரும் பாட்டுக்களிலும் பொருளுக்கேற்ப அழகென்றும் பொன்மேனியென்றும் இலக்குமி சம்பந்தம் என்றும் (கண்ணான பொன்னான வென்கிற படி) பிரீதிகரமென்றும், ஆங்கிலேயக் கருத்தாகிய valuable என்று மிங்ஙனமெல்லாம் கொள்க.

LXIX. நெற்றித் தனிக்கண் ணெருப்பைக் குளிர்விக்குங்
கொற்றத் தனியாழக் குலமுனிவ - னுற்றடைந்தான்
றேனாடுந் தெய்வத் தருவுந் திருமணியும்
வானாடுங் காத்தான் மருங்கு.

Nalan has come to Vidarpam. In the mean while Narada goes to Indra to create some disturbance. பரமேசுவரனுடைய நெற்றியினிடத்தில் இருக்கின்ற (லலாடத்தில்) ஒப்பற்ற நேத்திரமாகிய அக்கினியை (வெம்மை தணிக்கும்) தணிக்கவல்ல, இணையில்லாத (மகதியென்னும்) வீணைக்குரிய நற்குலத்து நாரதபகவான் (nom to the next word) வந்து சேர்ந்தார் ;—யாரைவந்தடைந்தா ரென்னில் ;—தேன் ஆடும் (தேன் or வண்டுகள் + தளம்பும் பூக்களையுடைய) தெய்வலோகத்துக் கற்பக விருக்ஷமுதலிய தருக்களையும் (தரு=tree) சிறந்தரத்தினத்தையும் பொன்னாட்டையும் காப்பாற்றுவோ (இந்திர) னிடத்தென்றவாறு.

LXX. வீரர் விறல்வேந்தர் விண்ணாடு சேர்கின்று
ராருமிலரா லென றையுற்று - நாரதனார்
நன்முகமே நோக்கினா னைங் சிறகரிந்த
மின்முகவேற் கையான விரைந்து.

வீரராம் வலிய இராசாக்கள் (விண்ணாட்டை) தெய்வலோகத்துக்கு வருகின்றவர்கள் யாரும் இல்லையே (ஆல்=ஆசை) யென்று ஆசங்கித்து (ஐ உற்று), நாரதரிஷியினதுநல்ல (முகத்தை) வதனத்தையே பார்த்தான், யாரெனில், மலைகளை (நா

கங்களை) இரக்கைகளை (சிறகுகளை) அறுத்த, மின்னுகின்ற முகத்தைக் கொண்ட (வேலை) வச்சிராயுதத்தையுடைய கரததனுகிய இந்திரன் வந்து எறு.

1. விரைந்து என்று ஐயுற்று நோக்கினன் கையான். 2. வீரர் விறல் வேந்தர் சேர்கின்ருர் யாருமே இலா=விண்ணுடு சேர்கின்ற வேந்தா யாரும் இலர். Indra asks Narada, how is it that I do not see any body come from the earth.

LXXI. வீமன் மடந்தை மணத்தின் விரைதொடுத்த
தாமம் புனைவான் சயம்வரத்து - பூமன்னர்
போயினர் என்ருன் புரந்தரற்குப் பொய்யாத
வாயினன் மாதவத்தோன் மன.

வீமராசனது பெண்ணினுடைய கலியாணத்தின் பொருட்டு, நல்மணம் உரிய மாலைபூண்டு கொள்ளும் படியாக ஸ்வயம் வரமென்னப்பட்ட அந்தச்சடங்கிற சென்று (சுயம்வரததிலே மாலைசூட்டப்பெற்றுக கொள்ளும்படி) மகத்தாகிய இராசாக்கள் (எல்லாரும்) போயிருக்கிருர்கள் என்றுரைத்தா, யாவற்கு யாவா என்னில், இந்திரனுக்கு ;—பொய்யாத (பொய்போகாத) வாய்மையராகிய, மகாப்பெரியதாபதர்களுக்கு (உள) ப்பெரியவராகிய நாரதா எறு. 1. வாயினன் மன், புரந்தரனுக்கு என்ருன், மாமன்னர் போயினர் என்பதை. 2. மாமனனர் போயினர். 3. புனைவான் (புனைய) போயினர். 4. தாமம் புனைவான். 5. பொய்யாத= infallible.

LXXII. அழகு சுமந்திளைத்த வாகத்தாள் வண்டு
பழகு கருங்கூநதற பாவை - மழகளிறு
வீமன் குலததுககோர் மெயததீப மறறவளே
காமன் திருவுககோர் காப்பு

The poet, not contented with the eulogistic descriptions he had already given, of Damayantis' personal perfections, introduces Narada also to speak more on the same subject. அழகைச் சுமந்து அதனுல் இளைத்துப்போன சரீரத்தாள்=(வண்டுகள் பழகுகின்ற கரிய அளக முடையபாவை) பாவையொததவள் =பெண் (nom to மெய்த்தீபம்) இளையாளை யொத்த வீமராசனுடைய குலத்துக்கு ஒப்பற்ற யதார்த்தமான விளக்கு. மற்று=அசை. அவள் மேலுமெப்படிப் பட்டவளென்ருல், மன்மதனுடைய ஐசுவரியத்திற்கு ஒப்பற்ற காவலாகவு மிருக்கினருள் – எறு. 1. ஆகததாள் கூந்தற்பாவை - மழகளிறு விமன், இவை விசேஷண விசேஷியங்கள். 2. காப்பு என்று நாரதர் சொன்னு= *Thus said Narada* is to be supplied. 3. பாவை=picture for *lady*.

LXXIII. மால்வரையை வச்சிரத்தா லீர்ந்தானும் வானவருங்
கோல்வளைதன மாலைகுறித் தெழுந்தார் - சால்புடைய
விண்ணுடு நீங்கி விதர்ப்பன் திருநகர்க்கு
மண்ணுடு நோக்கி மகிழ்ந்து.

மால்வரையை = பெரியமலைகளை ;—வச்சிரத்தால் = வக்கிராயுதத்தால் ;—ஈர்ந்தானும்=அரிந்தானும்=அறுத்தவனும் ;—வானவரும்=மற்றத்தேவர்களும்;—

கோல்வளைதன்= கோல்வளையினுடைய = கோலிய கைவளையினது = பெண்ணினது = தமயந்தியினது ;—மாலைகுறித்து=மாலையைக்குறித்து ;—எழுந்தார்= புறப்பட்டார் ;—சால்புடைய=நிறைவினையுடைய ;—விண்ணாடுநீங்கி=வான்நாட்டைத்துறந்து ;—விதர்ப்பன்றிருநகர்க்கு = விதர்ப்பனுடைய நகரத்துக்கு ;—மண்ணாட்டை முன்னோக்கிக்களித்து, எ-று. கோல்=curved.

1. Outline. சுரர்தானும் வானவரும் விண்ணாடு நீங்கித்திருநகர்க்கு மண்ணாடு நோக்கிமகிழ்ந்து (கோல்வளையின்) மாலையைக் குறித்து எழுந்தார். 2. (சுரர்தானும வானவரும எழுந்தார= Elementary form) 3. மால்வரையை வச்சிரத்தாலீர்ந்தான் = Enlarged form. 4. எழுந்தார Predicate ;—கோல்வளையின் மாலையைக்குறித்து எழுந்தார் = Completion of the Prediate, or Objective relation. இவைவாக்கியத்தின் பிராகிருத ரூபம = Principal elements of the sentence.

LXXIV. பைந்தெரியல் வேல்வேந்தன் பாவைபாற போயினதன்
சிந்தை கெடுத்ததனைத தேடுவான - முந்தி
வருவானபோற றோமேல வருவானைக கண்டார்
பெருவானிற றேவா பெரிது.

Indra and his companion-gods meet Nala in their way down to earth. பசியமாலைகளையும வேலாயுததசதையுமுடைய நளவேந்தனனவன் தமயந்தியினிடததில் முன்னமேபோய்விடட தன்னுடையநினைப்பை (கருத்தை or அறிவை) தடநதப்பிக் காணுது இழந்துபோய் அதைத்தேடுமபடிக்கு முந்திப்போகிறவன்போல்தன் இரதத்தின்மேல் வருகினறவனைதேவர்கள அகனறவானததில் நனருய்க்கண்டார்கள் எ-று. 1. தேவர்கணடாாவருவானை. 2. வேநதன் அதனை (சிந்தையை) த்தேடவருவான் போல்வருவானை. 3. வருவானைவேந்த (னை) =வருகின்றவேந்தனைக்கண்டார்.

LXXV. காவறகுடை வேநதைக் கண்ணுறறு விண்ணவர்கோ
னேவற் றொழிலுக் கிசையெனறு - னேவறகு
மனனவனு நேர்நதான மனததினுன மறறதனை
யினனதென வோரா திசைநது.

Indra engages Nalan to act as messenger in his behalf. தன்குடிகளைக் காப்பாற்றும் இராசாங்கச் சின்னமான குடையையுடைய நளனைக்கணடுக்கி, இநதிரனனவன், தூதுவக்கிரியைக்குச்சம்மதி (நீசம்மதிக்கவேண்டும்) என்றான். (இநதிரன்) ஏவினதூதுபோதற்கு நளனும் சம்மதித்தான். எப்படியென்றால், தன் அறிவினால் (மற்று) இந்திரன்கேட்ட அதை, இன்னதென்று யோசியாமல் உடம்பட்டு (நேர்ந்தான்) எ-று. N. B. Nala consents to the proposal without knowing what Indra meant. 1. காவற்குடை—செங்கண்மதயானை - பைந்தெரியல்வேல் – கொற்றத்தனியாழ்க்குல (முனிவன்)–கெட்டசிறுமருங்குல் – பொதியிருந்த மெல்லோதி (ப்பொன்) – கொய்தாமவாச (க்குழல்)–செங்காலின (வன்னம்) - ம

மூலகு நின்றகவிகை நிழல் (வேந்தே) – மோட்டிளங் (கொங்கை) –எழுவடுதோ ண் (மன்ற) –பார்மடந்தை (கோமான்) – திசைமுகந்த வெண்கவிகைத்தேர் (வே ந்தே) - செய்யகமலத் (திருவை) – வென்றிமத (வேடன்) – These and similar phrases may more conveniently be parsed (விசேஷணங்கள்) Attributes, in the sense of complex ideas as *a man on horseback*, than உருபும்பொருளு முடன் றொக்கதொகை and the like.

LXXVI. செங்கண் மதயானைத் தேர்வேந்தே தேமாலை
யெங்களிலே சூட்ட வியல்வீமனை - மங்கைபாற்
றூதாக வென்றானத் தோகையைத்தன் னுகத்தாற்
கோதாக வென்று னக்கோ.

செம் + கண் + மதம் + யானை + தேர் + வேந்து + ஏ ;—தேம் + மா லை—எங்கள் + இல் + ஏ ;—சூட்ட ;—இயல் + வீமன் + மங்கை+பால் ;— தூது + ஆக for ஆகுக ;—என்றான் ;—அ + தோகை + ஐ ;—தன் + ஆக ம் + அத்து + ஆல்=ஆகத்தால்=நெஞ்சினால்= மனோபலத்தினால் ;—கோது + ஆக=என்கிறபடி ;—வென்றான் ;—அ + கோ=நளன்.

Prose Order.

தேமாலையை, அவள் எங்களிலே யாருக்காவது சூட்டும்படி, இயல் வீமன் மங்கைபால், செங்கண்மதயானைத் தேர்வேந்தே நீ தூதனுக (ஆகு= ஒப்புக்கொ ள்ளாயா) என்றான் இந்திரன். (அப்போது) அந்த நளன் அந்ததமயந்தியை தன்ம னோ பலத்தினால் நீ சக்கை (துப்பி=திப்பி = மென்று உமிழ்ந்த மிச்சில்) ஆகுக (நீ கெட்டாய போவென்கிற படி) என்று நினைத்துக்கொண்டான் எறு.

Although she is the object of his affection, yet he did not hesitate to give her up when others wished the same. என்றான்=*he thought, considered or regarded* ;—when one speaks of the mind of another, என்கிறது is equivalent with *would* in English.

LXXVII. தேவர் பணிதலைமேற் செல்லுந்திரிந் தொருகான்
மேவுமிளங் கன்னிபான் மீண்டேகும் - பாவிற்
குழல்போல நின்றுழலுங் கொள்கைத்தே பூவி
னிழல்போலுந் தண்குடையா னெஞ்சு.

இந்திரன்முதலிய தேவர்களுடைய வார்த்தையைத் தன்தலையின்மேலதாகவை த்துச்செல்லுகின்றது (சிறிதுகாலம்), பூவினிழல் போலும் தண்குடையான்நெ ஞ்சானது. மற்றொருவேளை சுற்றித்திரும்பி வருகின்றது அவன்மனம். தமயந்தி யினிடத்திற்குச் சென்றுதிரும்பும் சிறிதுநேரம் அவன் உள்ளம். நெய்வோர்பாவி ல் ஓடுகுழலைப்போல் நின்று நின்று சுற்று (சற்றுச்சற்றுச் சென்றுதிரும்பு மென் கிறபடி) கின்றது தண்குடையான் நெஞ்சு. புஷ்பவிருக்ஷங்களது குளிர்நிழலைப் போன்ற குளிர்ச்சிசெய்யும் குடையினைக் கொண்டா னுடைய உள்ளமானது (இ ம்மாதிரியான) கொள்கையதாமென்றவாறு.

1. கொள்கை=மனங்கொண்ட கோள்=போங்கு. 2. செல்லுங்கொள்கைத்து நெஞ்சு, மேவுங் கொள்கைத்து நெஞ்சு, மீண்டேகுங்கொள்கைத்து நெஞ்சு, நின்றுழலுங் கொள்கைத்து நெஞ்சு என்றும வரும். Nalas' state of mind ;— he knows not what to do, he is still in Indras' preseuce.

LXXVIII. ஆவ துரைத்தா யதுவேதலை நின்றேன்
றேவர்கோனே யத்திரு நகரிற் - காவல
கடக்குமா றென்னென்றான் காமநீ ராழி
யடக்குமா றுள்ளத் தவன்.

ஆவது (என்னால் ஆகவேண்டியது) செய்யச்சொன்னாய், அதையே செய்ய உறுதி கொண்டேன், தேவர் கோவாகிய உனக்கே நிகரொன்றும்படியான அந்த விதர்ப்பனுடைய (வீமனுடைய) பட்டணத்திற்குள் காவலாளரைத் தப்பிச்செல்லும் உபாயம் என்ன என்று கேட்டான், பெண்ணாசைக்கடலை (ப்பெருகொட்டாது) தாழ்த்தும் உபாயந்தெரிந்த மனத்தோன் நளன் எறு. I am quite willing to obey your order, but what shall I do to pass over the guards about her palace, says Nalan.

LXXIX. வார்வெஞ் சிலையொழிய வச்சிரத்தான் மால்வரையைப்
போர்வெஞ் சிறகறுத்த பொற்றோளான் - யாருமுனைக்
காணார்போய் மற்றவளைக் காணென்றான் காவண்டின்
பாணாறுந் தாரானைப் பார்த்து.

கறுப்பு வண்டுகளது பண்கள் பரிமளிக்கும் பூமாலையணிந்த நளனைநோக்கி ;--நீண்டகொடிய வில்லானது நீங்கலாக (without, excepting) வச்சிரத்தினாலே பெரியமலைகளை, அவற்றது போர்புரிவெம்சிறகுகளை அறுத்துவிட்ட வலிய தோளான் இந்திரனானவன், ஒருத்தரும் உன்னைக் காணமாட்டார்கள், நீ (சந்தேகியாது) போய் (மற்று) அவளைக்கண்டு (பேசு) என்றான். 1. பொற்றோளான் தாரானைப்பார்த்து, யாருமுனைக்காணார் (நீ) போய் அவளைக்காண், என்றான். 2. சிலையொழிய (இல்லாமல்) வச்சிரத்தால் வரையைச் சிறகறுத்த தோளான்.

LXXX. இசைமுகந்த வாயு மியலறிந்த நாவுந்
திசைமுகந்தா லன்ன தெருவும் - வசையிறந்த
பொன்னாடு போந்திருந்தாற் போன்றதே போர்விதர்ப்ப
னன்னாடர் கோமா னகர்.

வாத்தியங்களை (மோந்த) உடைய ஒலிமுகவாயில்களும், (கட்டிடங்களது) சாயல் விளங்கிய மத்தியப் பிரதேசங்களும் கீழ்த்திசைமேற்றிசைமட்டு முகந்து கொண்டிருக்கிற வீதிகளும் எப்படி இருந்தனவென்றால், வசையில்லாத பொன்னாடானது அங்கிருந்து பெயர்ந்து இங்கே இறங்கி யிருந்தாற்போ லிருந்தது, எதுவென்றால், போர்செய் விதர்ப்பநாட்டாரது கோமானுடைய நகரம் என்றவாறு. N. B. வாயும் நாவும் தெருவும் in apposition with நகர்;—or வாயினையும் நாவினையும் தெருவினையும் பார்த்தால் should be supplied. Nalan is come to the capital of Bhima. He is invisibe to others.

LXXXI. தேங்குவளை தனனிலே செந்தாமரை மலரப்
பூங்குவளை தாமரைக்கே பூத்ததே - யாங்கு
மதுநோக்கு நாரானும வாணுதலுந தமமிற
பொதுநோக செதிர்நோக்கும் போது.

ஆங்கு=தமயந்தியின் அந்தப்புரத்தி னிடத்தில் தேனுனது நோக்குகின்ற மா லையையுடைய நளனும், (வாணுதலாள்) தமயந்தியும ஒருத்தரை ஒருத்தர் வெறும் பார்வையாக (பொதுநோக்கு) எதிர்நோக்கின பொழுது, தேங்குவளையிலே செந்தாமரையானது புஷ்பித்தது, தாமரையிலே (பூங்குவளை) கருநெய்தலானது பூத்தது எ-று. இரண்டு புஷ்பங்களும் கண்களுக்கு உபமான மாதலால் ஒருவர் கண ணில் ஒருவர் விழித்தார்களென்றபடி. மலர்பூத்தது=அவள் பார்க்க அவன்பார்த் தான்.

LXXXII. நீண்ட கமலத்தை நீலக்கடை சென்று
தீண்டு மளவிற் றிறந்ததே - பூண்டதோ
ரற்பின்றாழ் கூந்தலாள் வேட்கையகத் தடக்கிக்
கற்பினாற்றாழ் விழ்த்த கதவு.

நீண்ட தாமரை யொத்த நளனுடைய முகத்தை, நீலோற்பல மொத்த தமயந் தியின் கடைக்கண்ணுனது தொட்டவுடனே, கற்பென்கிற தாழ்ப்பாளைததானே மாட்டியிருந்த கதவானது திறவுண்டது. எப்படி அடைத்திருந்த கதவென்றால், ஒப்பற்ற அன்பு பூண்டதாழ் கூந்தலாள் (தமயந்தி) தன் அவாவை உள்ளத்தில் அ டக்கித்தாட் போட்டு வைத்த கதவு எ-று. 1. அறபின்=அன்பின் 5th case 2. தா ழ் கூந்தலாள்=தாழ்கின்ற = தாழ்ந்துநீண்ட. 3. கற்பினாற்றாழ்=கற்பின்தாழ்=க ற்பினது தாழ்ப்பாள். 4. தீணடுமளவில்=தீண்டுதலும்=காலங்கண்ணிய மரபிற் செய்தென்னெச்சம்.

LXXXIII. உய்ஞ்சு கரையேற வொட்டுங்கொ லொண்டொடியா
ணெஞ்சுதடவு நெடுங்கண்கள் - விஞ்சவே
நீண்டதோ வங்ஙனே யிங்ஙனே நீண்மலரா
னாண்டதோண் மன்ன னழகு.

தமயந்தியைப் பிழைத்துக் கடத்தேற விடுமோ (இடங்கொடுக்குமோ) ,ஒண் தொடியாளுடைய இருதயத்தைப் போய்த்தொடுகின்ற நளனுடைய கண்கள் ;மன் னனுடைய அழகானது மெததவே (மிஞ்ச=விஞ்ச = மிஞ்சி=மிகுந்து) நீண்ட தோ=நீண்டு போயிற்றோ, அங்ஙனே தமயந்தி கண்ணிலும் இங்ஙனே நளனிடத் திலும், எ-று. எப்படிப்பட்ட மன்னன் ? தோள்மன். என்னதோள் ? ஆண்டதோள். யார் ஆண்டதோள் ? நீண்மலரான் ஆண்டதோள். 1. உய்ஞ்சு=உய்ந்து like பா ய்ந்து=பாய்ஞ்சு, காய்ந்து=காய்ஞ்சு 2. கண்கள் ஒட் டுங்கொல்=Interrogative or Exclamatory sentence. 3 மன்னனழகு விஞ்சவே நீண்டதோ ! the same.

Authors' remark.

LXXXIV. மன்னுகத் துள்ளழுந்தி வாரணிந்தமென் முலையும்
பொன்னுணும புககொளிப்பப் புல்லுவெனென - றுன்னு
வெடுத்த பேரனபை யிடையே புகுந்து
தடுத்ததே நாணாந தறி.

மன்=மன்னனுடைய + ஆகத்துள்=அகத்துள்=மனதுக்குள் + அழுந்தி + வார் + அணிந்த + மெல் + முலையும் + பொன் + நாணும் + புக்கு + ஒளிப்ப + புல்லுவென் + என்று + உன்னு (உன்னி) + எடுத்த = கிளம்பின + பேர் = பெரிய + அன்பை + இடையே = மத்தியிலே இரண்டற்குமிடையிலே + புகுந்து = விழுந்து + தடுத்தது + ஏ + நாண்=கூச்சம்=மானம் + ஆம்=ஆகிய + தறி=தடி=கட்டை. எறு. 1. நாண் (ஆகும்) தறிதடுத்தது. 2. எடுத்த பேரனபைததடுத்தது. 3. இடையேபுகுந்து தடுததது. 4. உன்னியெடுத்தபேரன்பைத்தடுததது. 5. புல்லுவெனென்றுன்னியெடுத்த. 6. மன்னுகத்துள்ளழுந்திப்புல்லுவென்என்று. 7. எப்படியாக? வாரணிந்த மென்முலையும் அதன்மேல் கிடக்கினற (பொன்) முன்னூலும் (முந்நூலும்) நளன்மார்புக்குளேபுகுந்து காணுமற போம்படியாகப் புல்லுவேன் என்கிறதாக. 8. வார் = இரவிகை. பொன்நாண் = பொன்கயிறு, நூபுரம், மேகலை, சிலம்பு, கழல் = கண்டாமணி இவைகளும் இவை போல்வன பிறஆபரணங்களும் எந்தமாதிரியென்றும் இக்காலத்துப் பெயாகளில் எதனுல் எதைக்கூறுவதென்றும் இககாலததில் தெரியாது. அரசாகளது அணிகள், சாதாரணர்களுடைய நகைகளின் வேறேயாமென்றுந் துணிகின்றனர். துணிநதும, போஜன சுரமாய்க் கிடந்த போது பட்டததளாசி (மிளகு) சாத்தமுதும் பருப்புத துவையலும் கொடுவந்து வைததாளென போஜசரித்திரத்திற் கண்டாஙகே, அக்காலத்தும் இககாலத்தும் விததியாசம இல்லையென்று வீணிடர்ப்படுவோருமுணடு.

LXXXV. காவல்கடந தெங்கள் கன்னிமாடம் புகுநதா
யாவனோ விஞ்சைக் கிறைவனோ - தேவனோ
வுளளவா சொல்லெனறு ஞசறகுழை மீது
வெளளவா ணீர்சோர விட்டு.

காவல் for காவலை = guards ;—கடந்து = தப்பி = escaping ;—எங்கள் கன்னிமாடம்=எங்கள் கன்னிகாமாடததை = அரமனைக்குள=into our ladies' apartments ;—புகுந்தாய்=thou enteredst ;—யாவனோ=நீ யாரோ=who art thou I wonder !—விஞ்சைக்கு இறைவனோ=மந்திரத்துக்குத தலைவனோ=மந்திரக்காரனோ=மாயவித்தை பண்ணுகிறவனோ=மாயாவியோ = perhaps a magic-man !—தேவனோ=தேவலோகததானோ!—உள்ளவா=உள்ள ஆற்றினை=உள்ளபடி=மெய்யை=truth or as it is in truth ;—சொல்=சொல்லு ;—என்றாள் ;—ஊசல்=உஞ்சலாடுகின்ற=hanging and vascillating ;—குழைமீது=குண்டலங்கள்மேலே ;— வெள்ள for வெள்ளத்தின்=sea-like, prominent, brilliant, broad ;—வாள்=ஒள்ளிய=ஒளியான ;—நீர்=நீரை ;—சோரவிட்டு= வடியவி

ட்டு=letting down. 1. கைசற்குழைமீது வெள்ளவாள் நீர சோரவிட்டு=உற்றுப் பார்த்து என்கிறபடி=casting her (or his) eyes intensely, looking sharp. 2. கன்னிமாடம்=a separate lodging for unmarried young ladies. 3. உள்ளவா = உள்ளவாறே=உள்ள ஆக. Damayanti Speaks to Nalan.

LXXXVI. தீராதகாமத் தழலைத்தன செம்மை யெனு
நீராலவித்துக் கொடு நின்று - வாராத
பொன்னுடை லோவலுடன போந்தவாசொல்லித் தன்
னனாடுஞ் சொன்னா னளன்.

Nalan answers. தணியாத இச்சையாகிய நெருப்பைத்தன்னுடைய தத்துவ நிலையென்கிற தண்ணீரால் குளிர்வித்துக்கொண்டு ;—நமிடத்தில் வர நமக்குயோக்கியம் போதாத தேவலோகத்தாருடைய தூதுடனே தான்வந்ததைச்சுகூறித்தன் நல்ல தேசத்தின் (பெயரையும்) வெளிவிட்டான் நளன எறு.

1. தீராதகாமம்—வாராதபொன்னாடர் - எதிர்மறைப்பெயரெச்சங்கள. 2. நளன், கொடுநின்று, போந்தவாசொல்லி நனாடுஞ் சொன்னான.

LXXXVII. என்னுரையை யாதென் றிகழா திமையவர் வாழ
பொன்னுலகங் காக்கும் புரவலனை - பொன்மாலை
சூட்டுவா யென்றான் றொடையிற்றேனை றூதிச்சே
யூட்டுவா னெல்லா முரைத்து.

என்பேச்சை என்னமோ என்று ஏளனம்பண்ணாமல் சுரர்களவசிக்கும்சொர்ணலோகத்தை ஆளும் அரசனை (இந்திரனை) மெல்லியமாலையை அணியாய் (போடு) என்றான், தன்மாலையில் தேனை வண்டிற்கே குடிக்கத்தருபவ (ஊட்டுவோ) னாகிய நளன் (Nom to உரைத்து and என்றான்) எல்லாததையுஞ் சொல்லி, எறு.

1. புரவலனுக்கு மாலையைச் சூட்டுவாய். 2 சூட்டு=ஆய்விகுதிகுன்றிய ஏவல் ;—சூட்டாய் and சூட்டுவாய்= ஆயவிகுதி கூடிய ஏவல். இங்ஙனம ஏவல்கள், எதிர்காலத்து முன்னிலை யொருமைப்புடை பெயர்பதமோ வெனறும், எதிர்மறை (negative conjugation) முன்னிலை யொருமையோ வெனறும் கருத இடம்பட்டுக்கிடக்கின்றமையைப் பொருள்நோக்கங் கண்டு தெளிக.

LXXXVIII. இயமர நின்றார்பப வினவளைகள் றேங்க
வயமருதோண் மன்னு வருதத-சுயமவரா தா
னினபொருட்டா லென்று நினைகென்று ணீள்குடையான்
றனபொருட்டா னைவா டளர்ந்து.

தேவாத்தியங்கள் நின்று சேவிக்க (கோஷிக்க) அநேகசங்கங்கள் நின்றுபிடிக்க (attributives to subject சுயம் வரந்தான் நின்பொருட்டு) வல்லமைபொருந்திய புசங்கள்பொருந்திய மன்னனே, சித்தஞ்செய்திட்ட சுயம்வரமானது உன்னைக்குறித்தே (ஆல்=அசை) யென்று நீ நினைக்கக்கடவாய் என்றாள், நீண்டகுடையுடைய நளனிமித்தம் மெலிந்து நைகின்றவள். எறு.

1. சேவித்தல், பிடித்தல் = colloquial terms for *beating* drums and *blowing* chanks, as வாத்தியம் or மேளஞ்சேவிக்கிறது, சங்குபிடித்தான். Damayanti says that the ceremony of Swayam Varam will be performed for you, not for any other. 2. சுயம்வரந்தான் நின்பொருட்டு = சுயம்வரம் நின்பொருட்டேதான். 3. நினை, நினைக்க நினைக இரண்டற்கும் பொதுப்பகுதி; நினைந்தேனை=நினைந்தேன். நினைப்பேன்=நினைவேன்.

## Prose Order of the Stanza.

நீள்குடையான் தன்பொருட்டால் நைவாளானவள், வயமருதோண்மன்னா, சுயம்வரந்தான் இயமரம் நின்றார்ப்ப இனவளை நின்று வங்க நின்பொருட்டே ஆம் என்று நீ நினைவென்று தளர்ந்து சொன்னாள். இனவளை like English, *a number of* trumpets.

LXXXIX. போதரிக்கண் மாதராள் பொன்மாலை சூட்டத்தா
னாதரித்தார் தம்மோ டவையகத்தே-சோதிச்
செழுந்தரள வெண்குடையாய் தேவர்களு நீயு
மெழுந்தருள்க வென்றா ளெடுத்து.

ஆதரித்தார் தம்மோடு தேவர்களும் நீயும் அவையகத்தே எழுந்தருள்க (புறப்பட்டு வாருங்கள்) இப்போது நான் மிகுதியாகச் சொல்ல மாட்டேன் என்றபடி.

1. போதரிக்கண் மாதராள் = விசேஷண விசேஷியம். போதரிக்கண்= விசேஷணம்=Attributive + மாதராள்=விசேஷியம்= Subject. போதுகண்= போதுபோன்றகண் (உவமைத்தொகை). போதாகியகண், like கண்ணனை மனுஷர் - பொன்னனைபிள்ளை= பண்புத்தொகை. அரிக்கண் = அரிபொருந்தியகண்=அரியை யுடைய கண்= அரியால் அழகிய கண் எனவேற்றுமைத் தொகையாகவும் அடையாகவும் வேண்டியவாறு கொள்க. அரிக்கண்ணை ஒருமொழியாகவுங் கொள்ளலாம். இரண்டுசொல் மூன்றுசொல் கூடி ஒருமொழிகளாய் வருவனவற்றை compound nouns என்று சொல்லத் தமிழில் வாய்பாடில்லை. சமாசபதமென்றால் விக்கிரகஞ் சொல்லவேண்டும், தொகையென்றால் விரிவேண்டும், தொடரென்றால் சந்திகளிலொன்றன வாய்பாட்டில் (Syntactical construction) போய் விழும்; விழுந்தால் அது parsing ஆயிற்று, அல்லது phrase,sentence ஆயிற்றேயன்றி ஒருமொழியென்றுவர இடங் (under a legitimate term) கிடையாமற் போகின்றது. மேலும், போது போலும் அரிபொருந்திய கண் என்று சேதிக்கையில், போது அரியினை விசேஷித்தாலென்ன வெனக்கேட்கப்படும். அதற்குப்பொருள் நோக்கத்தைக் கொள் என்றாலோ, அப்போ தனுபவக்கியானம் பிரமாணமாயிற்று, ஸ்மிருதியினால் (theory) காரியமில்லையென்று போகாவண்ணமே ஆதுநிகர் வடநூல் வழக்கம்பற்றி, ஸ்மிருதி, அனுபவத்திற்கு வழியுந்துணையுமாகட்டுமென்று, விக்கிரகங்கள் எத்தனை விளைந்தும் ஒரே விசேஷணம் என்னத்துணிந்தனர், பஸ்சிமகண்டத்துப் பாடைகளில் தொகையே கிடையாது, தொடர்களேயிருக்கைபற்றிச் சந்திக்குள்ளும் விசேஷணச்சந்தி (attributive combination) யென்றார்.

XC. வானவர்கோ னேவல் வழிச்சென்று வாணுதலைத்
தானணுகி மீண்டபடி சாற்றவே - தேனமரு
வண்டாரான் போந்து வச்சிராயுதற் றொழுதான
கண்டார் ருவப்பக கலந்து.

தேவர்க்கு அரசன் இந்திரனுடைய சந்தேசத்தின்படி போய் தமயந்தியைக்கி ட்டித்திருமபிவந்த வயணத்தை (தோரணியை) சொல்லுமபடி வண்டுகள் கூப்பிடு ம்வளத்தமாலை யணிந்த நளனெனவன் தமயந்தியை விட்டுப்போய் வச்சிராயுத னை (இந்திரனை) கும்பிட்டான் (வணங்கினன்) பார்த்தோர் கலந்துகளிக்கக்கு ம்பிட்டான். சந்தேசம்=தூது=message.

1. படி (படியை=சங்கதியை=முறையை account) சாற்றப் போந்து நள ன்வச்சிராயுதனைத் தொழுதான். 2. கண்டார்கலந்துஉவப்பத்தொழுதான். 3. நா ன்முகற் றொழுதேபோலும் வச்சிராயுதற் றொழுதான் என்னும்விகாரம்.

XCI. விண்ணவர்த மேவலுடன் வீமன் றிருமகள்பா
னண்ணுபுகழ் நளனு நன்குரைத்த - பெண்ணணங்கின்
வனமொழியுந் தேவர் மனமகிழத் தானமொழிந்த
மென்மொழியுஞ் சென்றுரைத்தான் மீண்டு.

தேவர்களுடைய் ஆக்ஞையைக் கொண்டு(உடன்)வீமனுடைய(திருமகள்) குமாரத்தியினிடத்தில் போய்ச்சேர்ந்து வந்த கீர்த்தியுடையநளனும் நன்றாகச்சொ ன்னஅந்தத் தெய்வப் பெண்ணினுடைய கொடிய மறுமொழியையும், அந்தத்தேவ ர்கள் உள்ளங் களிக்கத்தான் அவளிடத்தில் சொல்லிய நயவசனத்தையும (மீண்டு போய்) திரும்பிவந்து சொல்லினன் - எறு.

XCII. அங்கி யமுதநீ ரம்பூவணி யாடை
யெங்குநீ வேண்டினைமற் றவ்விடத்தே - சங்கையறப்
பெற்றாயென வருண ணுகண்டலன றருமன்
மற்றோரு மீநதார் வரம்.

அக்கினியானவன் அமுதத்தையும் தண்ணீரையும் அழகிய புஷ்பத்தையும்ஆ பரணங்களையும் வஸ்திரங்களையும் எந்த இடத்தில் நீநினைத்துக் கேட்கின்றாயோ (மற்று)அந்த இடத்தில் தடையில்லாமல் உடனே பெற்றுக் கொண்டாய்(என்றுஅ றி) என்றுசொல்ல,—வருண பகவானும் இந்திரனும் யமதருமராசனும் இன்னு முள்ள மற்றத்தேவர்களும் கொடுத்தார்கள் வரங்களை நளனுக்கு. எறு.

XCIII. அங்கவர்கள் வேண்டும் வரங் கொடுக்கப் பெற்றவர்க
டங்களோடுந் தாரவேநதன் சார்நதனனமேன் - மங்கை
வயமருவு கின்ற மனக்காவலர்க்குச்
சயம்வரந்தான் கண்டோர் சாரபு.

அங்கு + அவர்கள் + (அவன்) வேண்டும் + வரம் + கொடுக்க + பெற்று ;— அவர்கள் (தங்கள்) + ஒடும் + தார் + வேந்தன் + சார்ந்தனன் + மேல் + மங்கை + வ

யம் + மருவுகின்ற + மன for ஆசைகொண்ட + காவலர்க்கு for காவலருக்கென்று + சுயம்வரம் + தான + கண்டது for கண்டதாகிய or கண்ட=கொண்ட=நாட்டின் + ஓர் + சாரு = சாலை = பந்தலிடத்தை=சபையகத்தை. எறு. 1. பெற்றுச் சாந்தனன் சாலை, நளன் understood. 2. சார்ந்தனன்மேல்=சார்ந்தபிற்பாடு, Nala, together with Indra and others proceed to the Pandal, or the site of the Pandal.

XCIV. ¶ தூதுவந்த காதலனைச் சொல்லிச் செலவிடுத்து
மாதுவந்து பின்போன வன்னெஞ்சால் - யாது
மயிர்த்தா ளுயிர்த்தா ளணிவதன மெல்லாம்
வெயர்த்தா ளுரைமறந்தாள் வீழ்ந்து.

தூதுவனாகத் தன்னிடத்தில் வந்த அன்பனை, மாறுசொல்லி அனுப்பிவிட்ட தமயந்தி யானவள், அப்பால் சந்தோஷித்துப் போன நளனது கல (வல) நெஞ்சினது தன்மையால், சம்பவிக்கும் எதையுஞ் சந்தேகித்தாள், பெருமூச்சுவிட்டாள், அழகியதன் முகமெல்லாம் வேர்வை கொண்டாள், இன்னதுபேச வேண்டுமென்கிற சொற்களை முறைமறந்தாள் வீழ்ந்து, எறு. மாது அயிர்த்தாள் உயிர்த்தாள் வெயர்த்தாள் மறந்தாள். The state of Damayantis' mind between the time of Nalas' message and of the Swayam Varam ceremony.

XCV. உள்ளம்போய் நாண்போ யுரைபோய் வரிநெடுங்கண்
வெள்ளம்போய் வேகின்ற மென்றளிர்போற் - பிள்ளைமீன்
புள்ளரிக்கு நாடன் றிருமடந்தை பூவாளி
யுள்ளரிக்கச் சோர்ந்தா ளுயிர்.

உள்ளம் for courage, steadiness ;—போய்=having gone=being lost ;—நாண் போய்=and modesty being lost ;—உரை=speech ;—போய் ;—வரி + நெடும் + கண் + வெள்ளம் + போய் ;— வேகின்றமெல் தளிர்போல் = like tender green (young) leaves on fire ;—பிள்ளைமீன் for குஞ்சு மீன்களை = சிறியசாதி மீன்களை ; — புள் = குருவிகள் ;— Nom to அரிக்கும் ;—அரிக்கும=அரித தெடுக்கின்ற=ஆய்ந்துபோடும்படியான ,—நாடன் =நாடனுடைய= of Bhima ;—திரு மடந்தை + ஐ=(acc.) ;—பூவாளி=பூஅம்பானது ;—உள் அரிக்க= to corrode, to influence ;—சோர்ந்தாள + அவள் (understood) ;—உயிர= உயிர்சோர்ந்தாள்= she was dejected in spirit.

1. உள்ளம்போய், நாண்போய், உரைபோய், வரிநெடுங்கண் வெள்ளம்போய்=Sentences or nominatives absolute. 2. வெள்ளம்=*expansion of water* for *breadth*, and *breadth* for *brightness* of eyes. 3. வேகின்ற மென்றளிர் போல் உயிர் சோர்ந்தாள்=extension of the predicate. So also are the above sentences absolute, (either வினையெச் சத்தொடர் or பிறகர்த்தாக்களுடைய வினைகள், வாக்கியத்தின் முதற் கர்த்தாவின் வினையொடு முடிதல்.) 4. பிள்ளைமீற் புள்ளரிக்கு மென்பதில், ன், இன்னோசை நோக்கி இயல்பாயது. See 16th Sut. உருபியல் Nunnul :—also 15th தொகைமரபு of Tolkapiyan's Orthography ;—மெல்

லெழுத்து மிகுவழி வலிப்பொடு தோன்றலும், வல்லெழுத்து மிகுவழி மெலிப் பொடு தோன்றலும், இயற்கை மருங்கின் மிகற்கை தோன்றலும, உயிர்மிகவரு வழியுயிர கெடவருதலும, சாரியையுள வழிச்சாரியை கெடுதலும், சாரியையுளவ ழித்தன்னுருபு நிலையலும், சாரியை யியற்கையுறழத் தோன்றலும, உயர்திணைமரு ங்கினொழியாது வருதலும், அஃறிணை விரவுப்பெயாக் கவ்வியல் நிலையலும, மெய பிறிதாகிடத்தியற் கையாதலும, அன்னபிறவுந் தன்னியன் மருங்கின், மெய்பெற க்கிளந்து பொருள் வரைந்திசைக்கும், ஐகாரவேற்றுமைத் திரிபென மொழிப. Damayanti is still within herself.

XCVI. பூவின்வாய் வாளிபுகுந்த வழியே யென்
னாவியார் போனாலு மவ்வழியே - பாவியே
னாசை போகாதென றழிந்தா ளணியாழி
னோசைபோற் சொல்லா ளுயிர்த்து.

புட்பத்தின கண்வைத்து விட்ட அம்பானது என்னுள் நுழைந்த துவாரத்தி ன்வழியாலேயே என் உயிரானது ஓடிப்போய் விட்டாலும், ஒருபோதும இந் தநுழைவழியால் ஏழையே னுடைய இச்சையானது போகமாட்டாது என்று உ ருகினள், அழகிய வீணையினது இன்னோசைபோலும வார்த்தையாள பெருமூச் சுவிட்டு, எறு. 1 என் ஆவிபோனாலும பாவியேன் ஆசைபோகாது என்றாள் உயிர்த்து, என எச்சம் பின்னும், முற்று முன்னுமாய வந்தால், என்னென்விசேஷ றப்புடைத்தாம். உயிர்த்து என்றாள என வாராது, என்று உயிர்த்துச் சொன்னாள் எனவரும். 2. Again, it is to be noticed that ஆகு, என், இரு, and உண்டு should be taken under the doctrine of Factitives. 3. தந்தையார், தாயார் பி ள்ளையார் அம்மையார் கொடியார்(ஆவியார் எலியார புலியார) in Panchatantram are idiomatic terminations like பெண்ணாள் தையலாள், under rules of personification.

XCVII. ¶ வையம் பகலிழப்ப வானமொளி யிழப்பப
பொய்கையு நீள்கழியும் புள்ளிழப்பப - பையவே
செவவாயவன்றி றுணையிழப்பச் சென றடைந்தான்
வெவ்வாய விரிகதிரோன வெறபு.

உலகமானது ஒளியை இழந்துவிட, ஆகாயம் வெளிச்சத்தை இழந்துவிட, தடாகமும் நீண்டவாய்க்கால்களும (கழிக்கால்களும்) பறவைகளை இழக்க, செ வந்தவாய்களையுடைய அன்றில் பட்சிகள் தங்கள் தங்கள் துணைகளாகிய பெட் டைகளை இழந்துவிடும் படியாக, வெம்மையாய் விரிந்திருந்த கிரணத்தன்=சூ ரியன் மெள்ள மெள்ள அஸ்தகிரியைப் போய்ச் சேர்ந்தான் - எறு. இராத்திரியா யிற்று என்றபடி-Evening came on. 1. விரிகதிரோன் வெற்புச்சென்றடைந்தா ன். 2. விரிகதிரோன்=Subject. 3. சென்றடைந்தான்=Predicate.

4. வெற்புச்சென்றடைந்தான்=completion of the Predicate (பயனிலை த்துணிபு). 5. இழப்ப - இழப்ப - இழப்ப-இழப்ப - செயவென்னெச்சத் தொட ர்களும் செய்தென்னெச்சங்களே போலும்=sentences absolute.

XCVIII. மாயிரு ஞாலத் துயிர்காண வானரங்கிற்
பாயிருளென்னும் படாம் வாங்கி - சேய்நின்
றறைந்தா ரணம்பாட வாடிப்போய் வெய்யோன்
மறைந்தான் குடபால் வரை.

The Poet describes night. மாயிரு = மாட்சிமையாகிய பெரிய = very large ;—ஞாலத்து=ஞாலத்தில்=in the world ;—உயிர்காண = ஜீவராசிகளாது கணகள் காணும்படி=that mankind and animals may witness ;—வான் அரங்கில்=on or from the platform of Space, பாயிருளென்னும் படாம்வாங்கி= பரவிய இருள் என்கிற படங்கை விரித்துத்தூரமாயிருக்கின்ற இந்தபூதலத்தில் மித்திரனுக்கு (சூரியனுக்கு) வேதசுரங்களை சங்கீதம்போலாது, (அறைந்துபாட) சொலலி ஓத அதற்கு நடித்துச்சென்று சூரியன் அஸ்தமித்தான மேற்குத்திசையின் மலையில, எறு. 1. வெய்யோன் படாம்வாங்கி ஆடிப்போய் குடபாலவரை மறைந்தான். 2 உயிர்காண - ஆரணம்பாட- ஆடிப்போய், மறைந்தான. 3. மாவிரு, வகரவுடம் படுமெய்க்குயகர வுடம்படுமெய்வந்தது,see 12th Sutram உயிர்புணரியல Nannul.

XCIX. மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லிசனை தெரிந்த மெய்காப்ப - முல்லையொனு
மெனமாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது.

மல்லிகையென்கிற புஷ்பத்தையே வெள்ளைச்சங்காக (சங்கென்று கொண்டு=for chank) வண்டுகள் ஊத (சங்குபிடிக்க),ஆகாசரூபமாயிருக்கின்ற (கரும்புவில்லியனுகிய) மன்மதனுடைய அம்புகளை (கணைகளை) பார்த்தெடுத்து சரீரங்களைப் பாதுகாக்க, முல்லையெனப்பட்ட மிருதுவாகிய பூமாலையானது அவரவர் தோள்களிலாட (இம்மூன்றுசெய்கைகளும இங்ஙனம் நிகழ) மெதுவாய் (அழகாயென்கிறபடி) அலப்பமயக்கத் தன்மையுடைய அந்திப்பொழுதானது எறு.

Parsing.

மல்லிகை ,—பொருட்பெயர் . செடியைக்குறித்தால் முதற்பெயர் : பூவினைக்குறித்தால் சினைப்பெயர். ஐகார ஈற்று அஃறிணை யொன்றன்பாற்பெயர். இரண்டாம வேற்றுமைத்தொகை மல்லிகையை—விரி இரண்டாமவேற்றுமை யென்னும் போழ்தே என்னவிளங்கும ? செயப்படுபொருளென்றும் செயவினையால் அவாவப்படுவதென்றும் விளங்கும. அவாவப்படுதலாவதென்ன ? வினைமுதல் வினையின் (தொழிற்) பயனை உறுவது எதுவோ அது செயப்படுபொருள்-உறுதலென்பதே அவாவுதல். செயப்படுபொருள செயயப்பட்ட பொருள் எனபதே வெள்ளென விளங்குவது, எனை அவாவுதல் அவாவப்படுதல் தொழிற்பயனுறுவது முதலியவை கருக்குதலாகும. செயப்படு பொருள் எத்தனை ? ஆக்கல் அழித்தல் அடைதல் நீத்தல் ஒத்தல் ஆறு. இவற்றுள் மல்லிகையை யென்பதியாது ? ஊதச்சத்தம் ஆகின்றமையால் ஆக்கப்படுபொருள வண்டானது மல்லிகையைச்சங்கமாக் கொண்டு திறறு, இவ்வாக்கியத்தை மல்லிகையைச் செயப்படு பொருளென்னுமல் வரும்படி எழுதுக ? மல்லிகையூதப்பட்டது ? இங்ஙனம மல்லிகை யாவதென்ன ? எழுவாய் இஃது பண்டையோர பக்ஷமோ ? அன்று. ஆதுநிகாக்குள்ளும் (Moderns) தமிழாள பக்ஷமாமோ ? ஆகாது. மற்றென்னும ? மாடம செயயபபட்டதென்னுமாறே இஃ தாஉம செயப்படுபொருளாம. இரண்டாவதாய் வந்தும முதலாவதாய வந்தும, செயயப்பட்டமையால் செயப்படுபொருளென்பது என்னகருத்

து ? காரியக்கருத்து ;—This house is built by Jack என்னுமிடத்தில் காரியக்
கருத்து இல்லையாங் கொல்லோ ? உண்டு, ஆயினும் This என்பதையே கருத்தா
வென்பர். மல்லிகை யூதப்பட்டதில் மல்லிகை கர்த்தாவன்றோ ? அன்று, என் ?
மல்லிகை ஊதிற்றில்லை. பின்னையா தூதிற்று ? யாது ஊதிற்றென்று தேவரீர்கேட்
கப்படாது, வாக்கியச்செய்கையில் இல்லாத சொல்லையெடுத்து வினாவிறசெயகை
செய்யப்படுமோ ;—வண்டினால் மல்லிகை யூதப்பட்ட தல்லவோ செய்கை ;எத
னால் ஊதப்பட்டதென்று தேவாகேட்கவேணடும் ;அதற்குவண்டினால் என்போம்-
இது மூனறாம்வேற்றுமைக் கர்த்தா. முதலாவது காததா உண்டோ : அதுதான் எழு
வாயென்பது. செய்வினைகளெல்லாம் முதலாமவேற்றுமையும் செயப்பாட்டுவினை
கட்கு மூன்றாம் வேற்றுமையும் கர்த்தாவென்றறிக. செய்தபொருளுககும் செய்ய
ப்பட்ட பொருளுக்கும் எழுவாயே, கர்த்தாவெனககொளளும் ஆங்கிலேயபக்ஷத்
துக்குச் செய்பொருள் எனச்சூத்திரத்தில் பொதுப்படவினைததொகை நிற்பதே
போதுமென்க.

C. புறகென்று ரநதி புனைமலர்க்க ணீருப்ப
நிற்கின்ற தந்தோ நிலங்காபபான - முறகொண்
டடைகின்ற வேநதர்க்கு மாணடஞசி ளோககு
மிடைநின்ற காலம்போ லின்று.

புற்கென்று (புற்கு blackish gold colour + என்று)=கறுப்புக்கலந்த பொ
ன்னிறமாய் ;—ஆர் for ஆர்கின்ற நிறைகின்ற= assuming=அந்தி = சாயஙகால
மானது ;—புனைமலர்க்கண=அழகிய புஷ்பஙகளில் தண்ணீர் (தேன்என்கிறபடி)
உண்டாக ;—நிற்கின்றது ;—அந்தோ=ஐயோ alas ;—நிலஙகாப்பான் முற்கொ
ண்டு (முன் முனனே=முன்னாக=முநதி + கொணடு)=நளனுக்குமுநதிககொ
ண்டு ;—அடைகின்ற=சோகின்ற ;—வேநதாக்கும ;—ஆணடு ;—அஞசினோர்க்
கும்=சநதேகித்தவர்களுக்கும் ;—இடைநின்ற=மததியில இருநத ;—காலமபோ
ல=தெளிவுஞசந்தேகமும் திடமுமபயமுமாய் (ஒன்றுந்) தோன்றாமல் ;—இன்று
இவறைததினத்தில்,எறு.

முந்திக்கொண்டோடுகின்ற அரசர்க்கும் சந்தேகித்துப் பின்வாங்கும் அரசா
க்கும் மத்தியகாலம் போல கருமையும பொன்மையுமாய் கண்ணீர்தளமப நிறகி
ன்றது ஐயோ இன்றைக்கு அநதிப்பொழுது எறு. ஆா=ஆர்கின்ற=வரவரக் கறு
ககின்றமையின். 1. ஆரநதிபுற்கென்று நீர் அரும்ப நிற்கின்றது அந்தோ. 2. இ
டை நின்றகாலம் போல் இன்று நிற்கின்றது=இநதக்கவியைப்பாடினவேளை ஒரு
வேளை அநதிப்பொழுது போலும் ! அதேநாள் அதே சாயங்காலம் அவரவர் உள்ள
மஙஙனங்கருதியது மதேகாலம் ஆக, இடைநின்ற காலம போல இன்று நிறகின்ற
தந்தோ வென்றது, இடைநின்ற தென்னக்கொள்ளப்படு மநதவேளையையென்க.
3. இன்று என்பது அன்றையதினததில் இனறைக்கு என்று கூறியபடி. 4. பு
ற்கென்றார்=புற்கென்று ஆகின்ற. இஙஙனமிது எச்சமன்று, பொள்ளென, சுள
ளென, செம்மிட்டு, சுறுக்கென்று, வெடுக்கென்று இவைபோலும். என்று என்ப
தின்மேல் இருத்திக்கூறினால் எச்சமென்று கொணடாலும் கொள்க, புறகென்று
நிறகின்றதென முடிகின்றமையின். 5. ஆரந்தி=வினைததொகை, ஆர்கின்ற ஆர்ந்
த ஆரும் அந்தியென்று உடம்பாட்டிலும் (affirmative) ஆராத அந்தியென எதிர்ம
றையிலும் ஆகநாலு ரூபங்களாய் விரியும் வினைததொகையென்று அறிக. புனைமல
ர்க்கண் இஃதுாஉம் வினைததொகை. புனையைப் பண்பாகவும நன்றாய்க்கொள்ள
லாம், இலக்கியங்களில் பெருமபாலும் புனைநிழல் புனைமலர் முதலிய பண்புகள
போலாது வருவனவற்றைக் காலக்கிளவி அவசியம் விரியவேண்டின் அவவிட
ங்களில்வினைததொகை யென்க.

CI. பைந்தொடியா ளாவி பருகுவா னிற்கின்ற
அந்தி முறுவலித்த தாமென்ன - வந்ததான்
மையார்வேற் கண்ணாள் வனமுலைமே லாரழலைப்
பெய்வா னமைந்த பிறை.

பைம் for பசுமை=பசிய=பச்சையாகிய green, blue, graceful ;— மை விகுதிப் பண்புப்பெயர் ;— 8th 9th Suts. பதவியல் Nannul ;—தொடியாள் (தொடி bracelet + ஆள் feminine termination)= Damayanti ;—6th Case தொகை ;—ஆவி=ஆவியை=உயிரை life, spirit ;—governed by பருகுவான= to drink, devour, suck up=குடிக்க, குடித்துவிட ;—24th Sut. வினை. Nan. Infinitive of *purpose* ;—நிற்கின்ற (நிகழ்காலத்துப்பெயரெச்சம)=that stands, ready ;—அந்தி=மாலை=சாயங்காலமானது (Nom to) முறுவலித்தது=புன்சிரிப்புக் கொண்டது=did smile (முறுவல் tooth)=இறந்தகாலத்து முற்றுவினை ஒன்றன்பால் agreeing with அந்தி ,—ஆமென்ன (ஆம் + என்ன) ஆம் என்னும் படியாக, ஆம்போல, போலவே=*to say Yes,* that it may be said *so it is*—a phrase equivalent to any of the உவமவுருபுகள் =particles of analogy—16th பொது Nan ;—வந்ததால் (வந்தது+ ஆல்)=came on, has arisen—Past Indic. 3rd pers-sing-Neut ;—மையார் வேற்கண்ணாள் (மை + ஆர் for ஆர்ந்த=நிறைந்த + வேல் + கண் + ஆள்)=அஞ்சனம் இட்ட - வேலைப்போன்ற விழியாளுடைய=of Damayanti ;—வனமுலைமேல் (வனம் + முலை + மேல் ;—ஆரழலை (ஆர் full, excessive, intense + அழலை)=கொடியநெருப்பை ;—பெய்வான்=பெய்ய, பெய்யும்படி, கொட்டுதற்கு= to pour, to shower down ;—அமைந்த=சமைந்த = உண்டான for =அமைக்கப்பட்ட or அமைபபுண்ட=அமையுண்ட that was formed, destined,purposed ;—பிறை (phace, *part* for *whole*) moon, (subject of the stanza, agreeing with predicate வந்தது.)

1. Paraphrased Order. பசிய வளையலாளுடைய பிராணனை உறிஞ்சுதற்கென்று நிற்கின்ற சாயங்காலமானது சிரித்ததாமென்னும்படியாக வந்து உதித்தது, ஆல்=அசை ;—யாதென்னில், கறுப்புப்பொருந்தி (யும்) வேல் (போன்றுமுள்ள) விழியினுளுடைய அழகிய மார்பின்மீதே நிறைநெருப்பை (வாரிக) கொட்டுதற்குப் பிறந்த இளஞ்சந்திரன் என்று. 2. Colloquial Order. மையார் வேற்கணணாளுடைய அழகுமார் பின்மேல் ஆரழலைப்பெய்தற்குப்பிறந்த பிறையானது ;—பைந்தொடியாளது பிராணனைக் குடிப்பதற்கென்று நிற்கின்ற அந்திதானே (தனக்குப்பு விளங்க) சிரித்தா லெப்படியோ (அப்படி) வந்தது என்று. 3. Outline. அந்தி முறுவலித்ததாமென்னப்பிறை வந்தது.

## Parsing.

a. பைந்தொடி, பண்புத்தொகை. பசுமையாகிய தொடி, அதன் விளக்கம். ஆகிய=பண்பைவிளக்குமொழி. 14th பொது Nan. (Adjective and Noun, or quality and subject) b. தொடியாள், பொருளால் வருபெயர் or காரணப்பெயர். பகுபதம், தொடி + ஆள்= தொடியாள். ஆறுமவேற்றுமை=

தொடியாளுடைய. c. ஆவி, இடுகுறிப்பெயர் (காரணமென்பாருமுண்டு) இரண்டாவது தொகை. d. பருகுவான் செயவென்னெச்சம்=பருக. (செயவென்னெச்சத்துக்குச் செய்யுளிலும் வழக்கிலும் எத்தனைவிதம் ரூபங்களுண்டோ எழுதுக? பருக, பருகுவான், பருகும்படி, பருகற்கு=பருகுதற்கு=பருகுதற்காக=பருகுதற்கென்று, பருகுநிமித்தம், பருகும் வண்ணம் இத்தியாதிகளே. e. நிற்கின்ற, நிகழ்பெயரெச்சம், இது அடையின் உபயோகத்ததென்று காண்க. f. அந்தி, காலப்பெயர் or சிறுபொழுதின் பெயர். கம். வேற் முறுவலித்ததற்கு எழுவாய்: உம்;—அந்தி முறுவலித்தது. g. முறுவலித்தது, முற்றுவினை. செய்வினை. முறுவல் என்னும் பெயரடியிற்பிறந்தவினை, இறந்தகாலம், படர்க்கை ஒன்றன்பால். h. ஆமென்ன, இதனோடு சந்திக்கும்போது, முறுவலித்தது வினையாலணையும் பெயருமாகும. வினைகள்தொழிற் பெயராகின்றும, வினையாலணையும் பெயராய்நின்றும் எழுவாயேற்புடைமை இரண்டாவதனையவாவுதல்முதலிய இலக்ஷணங்களைக்கொண்டே வரும். ஆமென்ன, சொல்லுவமவுருபு. முறுவலித்தது எழுவாய், ஆமென்னபயனிலை என்றுகொள்ளவுமகொள்க, போலிடைச்சொல்லும் எனையுவமவுருபுகளும் ஏற்புடை நிலையையும (concord) அவாய்நிலை (government) யையுங்கொள்ளககிடநத வாறே பைநதொடிமுதல் ஆமென்னகாறும் விசேஷணச்சந்தி. என்ன விசேஷணச்சந்தி? வநதது எனனும கிரியைககு கிரியா விசேஷணச்சந்தி. நன்றாய்வநதது எனின் ஒருவினையுரிகொண்டது. பைந்தொடியாளாவி பருகுவானிற்கின்ற அநதிமுறுவலிததசா மென்ன வந்தது என்கிறதில் பலசொற்கள் கூடி ஒரேவினையுரிப்பொருளாய்த்திரண்டு தாயேயொருசநதியாகி இந்தச் சநதி, வநதது என்வினைககு விசேஷணமாயிற்று. இடைப்பிறவரல்களான எழுவாய் முதலியசநதிசதும் தம்மாத்திரத்தே முற்றுப்பொருள செயயாது வந்த தென்பதோடு அடையாக அடுத்துப் பொருண்முடிபு செய்தலால் கிரியாவிசேஷணச் சந்தியென்னும் வாய்பாட்டினையாளுவர். i. ஆல்=அசை. j. மை, பண்புச்சொல் or பெயர். எழுவாய், ஆர முதனிலைவினையொடு முடிகின்றது=மை ஆர்கண். k. மைஆர்கண், வினைத்தொகை or காலங்கரந்த பெயரெச்சம, மைஆகின்றகண். l. வேற்கண், உவமைத்தொகை=வேல்போற்கண். m. கண்ணுள், சினையால் வருபெயர், காரணப்பெயர், கண்ணுள் சினையால்வநதும் எப்படி முதலையேயுணர்த்தி அம்முதலிற்காகவே நின்றதோ அப்படியே, மையார்கண்ணுமவேற்கண்ணுமாகிய வினைத்தொகையும் உவமத்தொகையுங்கூடி (கண்) ணுளுக்கு ஒருபணபாக (adjective=அடையாக) வந்தன. இங்ஙனம வேறுதொகைகள் கூடியவற்றையும் பண்பென்றாவது விசேஷணமென்றாவது கொள்வதேகோள். கண்ணுள், ஆரும்வேற்றுமைத்தொகை. n. வனமுலைமேல், உருபுபுணர்ச்சி இயல்பு, ஒக்கும் மன்அப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே யென்றமையால் என்க. 3rd Sutrum உருபுபு. Nannul. மேல், இடப்பொருளுருபு. o. ஆரழலை, வினைத்தொகையாகிய பண்பு. ஆரழல், ஆருயிர் முதலியவை பண்பை விளக்குமொழி விரியப்பெறாது, தமிழ்கூறு நல்லுலகத்துவழக்குஞ்செய்யுளுமாயிருமுதலின் நாடியென்றதுபற்றி, பண்பாகவேகொள்ள வேண்டி நிற்கின்றமையின் வினைத்தொகையாகி

யபண்பென்னப்படும். இரண்டாவது விரி p. செய்வான், பருகுவான் போலும். ஆரமுலைஅவாவுகின்றது,அவாவியும்பாட்டின்பிராகிருதரூபமாகிய (Principal) பிறைவந்தது என்பதற்கு விசேஷணச் சந்தியாதலின், இடைப்பிற வரலான (Objective Relation) கருமச் சந்தியேயாயிற்று. q பெய்வான் அமைந்த, செயவென்னும்வாய்பாட்டு வினையெச்சத்தொடர். r. அமைந்தபிறை ;—மைமுதல்அமைந்தமட்டும் பிறையொடு முடிதலால், அத்தனை தொகைதொடர்களுங்கூடிப்பிறை என்கிறஎழுவாய்க்குக் கர்த்தா விசேஷணம் ஒன்றே. கர்த்தாவிசேஷண மென்றதனால்பெயருரி யெனலாயிற்று. கர்த்தாவின்மேல் எத்தனை ஒட்டுவந்தாலும் அத்தனையுங் கூட்டிக் கர்த்தாவுக்கு ஒரே விசேஷணம் (அடை=பண்பு=உரி) என்க மேலைக் கிரியா விசேஷணத்திலும், அப்பால் கர்த்தா விசேஷணத்திலும் உள்ள, ஆறாவது இரண்டாவது தொகைகள், வினையெச்ச பெயரெச்ச எழுவாய்த்தொடர்களும்—வினைத்தொகை உவமத்தொகை ஆறாவதுதொகை ஏழாவதுவிரி இரண்டாவதுவிரி செயவென் னெச்சப்பெய ரெச்சத் தொடர்களும ;—இடைப் பிறவரல்களாதலின் இடைப் பிறவரலினிலக் கணங் (noun sentences in complex sentences) கூறும் போது கூறுதும். பிறைவந்ததுஎனச்செயப் படுபொருள் குன்றிய பயனிலை கேவலமாய் நிற்றலின் (completion of the Predicate) பயனிலைத் துணிபும் இல்லை, அதாவது செயப்படு பொருளே இல்லை, செயப்படுபொருள் இல்லையாதலால், கருமத்தை யொட்டிய ஒட்டுக்களாகிய (அடைந்த அடைகளாகிய) கரும விசேஷண மென்கிற, கருமவிசேஷணச் சந்தியென்னப்பட்ட (extension of the Predicate) பயனிலை முடிபும் இல்லை. பிராகிருதகர்த்தா பிராகிருத கருமம் பிராகிருதகிரியைகளுக்கு கர்த்தா விசேஷணம் கருமவிசேஷணம் கிரியாவிசேஷணமெனறுவரும் இடைப்பிறைவரல்கள், தத்தமவிகிர்த (Subordinate) கருத்தாவிகிர்த கருமவிகிர்தகிரியைகண்மேலும் தத்தம் விசேஷணங்களைப் பெற்றுவரும் நீண்ட விருத்தப்பாக்கள், நளவெண்பாவில் இல்லையாதலால், சுருங்கிய வெண்பா மட்டில் உள்ளவற்றைக்கண்டு தெளிக.

## Catechetical Outline.

வந்தது எது? பிறை. என்னபிறை? அமைந்தபிறை. எதற் கமைந்த? பெய்வானமைந்த. எதனை? ஆரமுலை. எங்கே? வனமுலைமேல். யாருடைய? கண்ணுளுடைய. எப்படிக்கண்? வேற்கண். மேலு மெப்படிக்கண்? மையார்கண். பிறை என்ன செய்தது? வந்தது. யாங்ஙனம் வந்தது? ஆமென்ன வந்தது. எப்படியாமென்ன? முறுவலித்த தாமென்ன. யாது? அந்தியானது. எப்படிப் பட்ட அந்தி? நிற்கின்ற அந்தி. எதற்கென்று நிற்கின்ற? பருகுவான் நிற்கின்ற. எதனை? ஆவியை. யாராவியை? தொடியா ளுடைய ஆவியை. எப்படித்தொடி? பைந்தொடி.

CII. கூட்டுமை போறசிறந்த கூரிருளைக்கூன் கோட்டாற
கோட்டு மண கொண்ட குளிர்திங்க - வீட்டுமணிப
பூணிலா மென்முலைமேற் போதச் சொரிந்ததே
நீணிலா வென்னு நெருப்பு.

கூட்டு for கூட்டின, வேண்டு மென்று சேர்த்த = purposely mixed, pre-

pared ;—மைபோல் = like the black paste = அஞ்சனக் கறுப்புப்போல் (modifying phrase to சிறந்த ;—சிறந்த=உயர்ந்த = so excelling ;—கூரிருளை (கூர்+இருளை) = கூர்ந்த இருளை = thick darkness ;—கூன் கோட்டால் = கூனியகொம்பினால் = by or through the curved horns ;—கோட்டு for கோட்டின or கொட்டின i e. வெட்டின=cut or dug out ;—மண் for மண்ணை earth ;—கொண்ட = sustained, borne ;—குளிர்திங்கள் = குளிர்ந்த சந்திரன் (Nom to சொரிந்ததே) ;—சூட்டு மணிப்பூண் (நெருங்கிய இரத்தின நகைகள்) jewels of studded precious gems ;—நிலாம் for நிலாவும் = நிலவும் =பிரகாசிக்கின்ற ;—மென்முலைமேல ;—போத=மிக= plentifully, abundantly ;—சொரிந்தது + ஏ =showered, poured, rained, ;—நீணிலா வென்னும் (நீண்ட கிரணமென்னப்பட்ட) called cool beams ;—நெருப்பு for நெருப்பை, fire. 1. Paraphrase வந்த எந்தப் பதார்த் தங்களாக கொண்டு கூட்டினால் கறுபபிலுங கறுபபு கனனங்கறேன்னுங் கறுப்பு உண்டாகுமோ (அப்படி) கூட்டிய மையினைப் போல உயர்ந்த காரிருட்டை தன்னுடைய கோணக் கொம்பினால் கொட்டுமணணாக (வாரிப்போட்டுக) கொண்ட சீதமதியமானது, நெருங்க (ப்பதிதத) இரததின ஆபரணங்கள் (மீதுகிடநது) சொலிக்கின்ற மிருதுஸ்தனங்கண் மீதே மிகுதியாகக்கொட்டிற்று குளிர்ந்த கிரணமென்னும (பெயரிய) நெருப்பினை எ-று. 2. Colloquial Order. அஞ்சனங் கூட்டிய மையிலுஞ் சிறந்த காரிருட்டைத்தன் கோணிய கொம்பினாலே கொட்டுமணணாகத் தன்மேற் (சுறை) கொண்ட குளிாஞ்சந்திரனானவன், தன் நீண்டசந்திரிகை யென்கின்ற அக்கினியை, தமயந்தியின் சூட்டுமணிப்பூண்கள் நிலவுகின்ற மென்முலைமேல், மெத்த மிகுதியாய்ப்பெய்ததுஎ-று.

3. Parsing. a கூட்டுமை, வினைத்தொகை, கூட்டினமை. கூட்டாகியமை (mixture, composition, compound) பண்புத் தொகை b. கூட்டுமை போல்= adverbial phrase modifying சிறந்த in particular (உவமவுருபு விரிந்த தொடர் or, சிறந்தவென் வினைகு வினையுரி சொமையாய வந்த–உவம வுருபு விரிநததொடர்) c. சிறந்த கூரிருளை, பெய ரெசசதடுதாடர். d. கூரிருளை, கூர்ந்த or கூரத்த (increased or amassed darkness) இருளை, வினைதடுதாகை, கூரிருள ஆரிருள ஆரழல் ஆருயிர் and the like are real adjective compounds, not வினைதடுதாகை necessarily. கூரிருளை, இடைப் பிறவரற் செயப்படு பொருள்=completion of the subordinate predicate கொண்ட. கூட்டுமை போற் சிறந்த கூரிருளை= விகிர்தகர்ம்ம விசேஷணச்சந்தி=extension of the subordinate predicate= பயனிலே முடிபு. e. கூன்கோட்டால், இஃதுஉம் வினைத்தொகை. முதல்குறுகினால் குனியென்றும். கூனிரும்பு கூன்கோடு முதலிய, காலம் விரியவேண்டாத வினைத் தொகையாகிய பண்புத் தொகைகள், கூன் பண்புப் பெயருமாதலின். கோட்டால், கருவிப் பொருள் =Instrumentality=*by, through, with.* f. கோட்டுமண் கொண்ட ie கூரிருளை க்கோட்டு மண்ணாகக் கொண்ட. வரவு வருதல், கொள்கை கொள்ளுகிறது சொலவு சொல்லுதல் are instances of factitives in Tamil. கோட்டுமண் கொள்ளுகிறது is an idiomatic compound. இருளைக்

கோட்டு மண் கொண்டது என்னில், அதைக்கோட்டு மண்ணாகக் கொண்டது என்று, ஆக or ஆய்விகுதி குன்றி வருகின்ற நாட்டோடியவழக்காம். என்னைக் குறிக்கொண்டான், புதனகிழமையை நாட்பாரதிருக்கிறோம், இந்தா இதைவாய்க்கரிசிபோட்டுக் கொள், இத்தியாதிகள் அநேகம். முந்தினசொல் இரண்டாவதும் பிந்தினசொல் ஆகவென் விகுதியுமாய் அநாரிய பாஷைகளில் வருவதே, ஆங்கிலேய முதலிய ஆரிய பாஷைகளில் ஒரேவேற்றுமையில வருவதும் என்றறிக. உம். இராமம் தசரதம விக்தியென்றால் (factitive object) இராமனை தசரதனாக அறி. உலுத்தனை நான்தரித்திரனென்கிறேன் (I call a miser a poor man = உலுத்தனை த் தரித்திரனை என்கிறேனை) g. கொண்ட குளிர்திங்கள், பெயரெச்சதொடராகிய வினைத் தொகை. h. திங்கள், இப் பாட்டிற்கு எழுவாய், பிராகிருத கர்த்தா. திங்கள் என்று மாத்திரம் நின்றால் தனி யெழுவாய் = கேவல கர்த்தா simple subject. குளிர் திங்கள்-கொண்ட குளிர்திங்கள் - கோட்டுமண் கொண்ட குளிர்திங்கள் முதலியவை அடையெழுவாய், விசேஷணகர்த்தா = enlarged subject. i. சொரிந்தது, பயனிலை, பிராகிருத கிரியை=Principal Predicate. j. நெருப்பை = செயப்படு பொருள = கருமம = object or completion of the predicate.

4. Outline. திங்கள் சொரிந்ததே நெருப்பை. 5. கூரிருளைக் கொண்ட குளிர் திங்கள். 6. கூட்டுமைபோற் சிறந்த கூரிருளை. 7. ஏட்டுமணிப்பூண் நிலாம் மென்முலைமேல்போத சசொரிந்தது. 8. நீணிலாவென்னும் நெருப்பை.

CIII. அன்னங்கா ணீங்களுமவ் வாதித்தன றுமபோய
மன்னும்படி யகலா வல்லிரவின - மின்னு
மழைந்தாரைா வலலிருட்கும வாடைக்கு நாங்கள்
பிழைத்தால் வந்தே னென்னும பேர்.

அன்னங்காள்=அன்னங்களே (Voc. 51. பெயரியல் Nan.)=O Swans ;— நீங்களும=yourselves ;—அவ் ஆதித்தன் தானும்=and that sun=சூரியனும் ;— போய் மன்னுமபடி=போய் இருக்கும்படி=காணாது மறைந்துபோம்படி=that ye may not be seen ;—அகலா (த) வல்லிரவில்=நீங்காத நள் இராவிலே=in this night which will not end so that you may be lost to me for ever, ;—மின்னு மழை=மின்னுகிறமேகத்தினுடைய=மின்னலுடன் கூடியமழையினுடைய ;— தாரை=வீழ்வுகளாகிய=streaks=நீர்த்தாரைகளாகிய ;—வல் இருட்கும்=அடையிருளுக்கும்= to thick darkness (*from, out of*) ,—வாடைக்கும்=ஊதற்காற்றுக்கும் and from cold wind ;—நாங்கள் ;—பிழைத்தால்=தப்பினால்= if we escape or if we survive ;— வந்து= நீங்கள் நாளை காலமே திரும்பிவந்து=you may return to-morrow ;—என்=why=what is the matter=how do you do ;— என்னும் for என்னுங்கள் = என்று கேளுங்கள்=and may ask or enquire ;—பேர் for எங்கள்பேரை or எங்கள்பேரைச சொல்லிக் கூப்பிட்டு=calling at home என்கிறபடி.

1. Paraphrase. அன்னங்களே நீங்களும் (அதோ மறைந்தானே) அந்தச்சூரி

யனும் (போய் மன்னும்படி) போகவே போய்விடும்படியாக, நான் அகலேனென்றிருக்கிற இந்தப்பொல்லாத இராத்திரியில், மின்னுகிற இந்தமழையின் நீரததாரைகளாகிய அடையிருளுக்கும் இந்த ஊதலுக்கும் நாங்கள் தப்பிப்பிழைத்திருந்தால் நீங்கள் நாளைவந்து எங்கள்பேரைச் சொல்லிக்கூப்பிட்டு ஏன் என்று கேளுங்கள், எறு. 2. Colloquial Order. With exception of the last word போ, the rest could be read in colloquial style in the stanza itself. 3. Outline. நாங்கள்பிழைத்தால் (நீங்கள்) வந்து ஏன் என்னுங்கள். 4. இருளுக்கும் வாடைக்கும் பிழைத்தால். 5. என்னும்=2nd person plural Imperative ;--also Optative in common use, as, வாரும்=வாருங்கள் please come, சொல்லும்= சொல்லுங்கள், please tell &c., &c. 6. Parsing. a நீஙகளும் ஆதித்தனும்=எண்ணுமமை. போய் மன்னும்படி என்பதற்குத் தனியெழுவாய்கள். மன்னும்படி in order to stay, an infinitive phrase= மன்ன. Also the 4th case of every verbal noun is equivalent to supine or infinitive, as மன்னுதற்கு செய்தற்கு=செய்ய. உண்ணுதற்கு வந்தான்=உண்ணவந்தான்.

CIV. செப்பிளங் கொங்கைமீர் திங்கட்சுடர் பட்டுக
கொப்புளங் கொண்ட குளிர்வானை - யிப்பொழுது
மீனபொதிந்து நின்ற விசும்பெனப தெனகொலோ
தேனபொதிந்த வாயாற தெரிந்து.

செப்பிளங்கொங்கைமீர (செப்பு + இளம் + கொங்கைமார்+ ஈர்)=சிமிள் (போலும்) இளமைய கொங்கையீரே=O ye maidens (See 13th பதவியல்and 52nd பெயரி Nan) ;—திஙகட்சுடர் (திஙகள் + சுடர)=திங்களதுசுடர (6th case, உருப்பு) =moons' beams ;— சுடர் nom to ;— பட்டு = touching, affecting ;—சுடர்பட்டு=nom absolute ;—கொப்புளங்கொண்ட = புடைப்புக்கொண்ட = கொப்புளங்களைப்பெற்ற=blistered ;—குளிர்வானை = குளுந்த ஆகாயத்தை=object governed by என்பது ;—இப்பொழுது=now ;—noun-adverb, if இப்பொழுதில், a prepositional phrase ;—மீன்=மீன்கள்=உடுக்கள் =நக்ஷத்திரங்கள்=stars ;—பொதிந்து நின்ற=நிறைந்து நின்ற=பெருகியிருக்கிற=filled ;—விசும்பென்பது=ஆகாசம் என்கிறது = வானை ஆகாசமென்பது factitive object)=வானை ஆகாசத்தை என்பது)=to call the blistered space a starry heaven ;—என்கொலோ=என்னவோ=என்னும்=What, How, is it possible ;—தேன்பொதிந்த = தேன்நிறைந்த=honey-droping ;—வாயால் வாயினுல் ,—தெரிந்து for தெரிந்தும் in spite of all knowledge, against conscience.

1. Paraphrase. செப்பிளங் கொங்கைமாரே, (voc) நிலாவின் கதிரானது பட்டு (பட=பட்டதினுல்) கொப்புளங் கொப்புளமாய் எழும்பப்பெற்றிருக்கின்ற தண்ணிய வானத்தை, இப்பொழுது (நீங்கள்) நட்சத்திரங்கள் நிறைந்திருக்கிற ஆகாசமென்று (அழைப்பது) சொல்லுகிறது என்ன (நியாயம்), தேன்பொலிந்த உங்கள் வாயினுல், தெரிந்தும் எறு. 2. Prose Order. திங்கட் சுடர்பட்டுக் கொப்புளங்

கொண்ட குளிர்வானே, தெரிந்தும், தேன்பொதிந்த வாயால் மீன்பொதிந்த விசும் பென்பது என்கொலோ.

3. Parsing. என்பது, தொழிற்பெய ரொழுவாய், என்சொல், வினைப்பயனி லை. குளிர்வானைவிசும்பென்பது=Indirect Object. உன்னை புத்திமான் என்று நி னைத்தேன்=உன்னை நினைததேன் புத்திமானை நினைததேன். அவளைத்தநகைகயென் றிருநதேன், கநதன் அரசனுனன், பொன்னனைப்பொய்யனுக்கினுாகள், வெள்ளை யைக் கறுப்பென்ருன் இததியாதிகளை யெல்லாம், பசுவைப்பாலகறநதான் என்ப து போல் முதல்சினைப் பொருட்டாய்கொள்ளார்; ஆக்கப்பொருட்டென்றும் என்னற் பொருட்டென்னும இருததற் பொருட் டென்றுஙகொணடு அவற் றை factitive என்ருெருசொல்லால இலககணங் கூறுவா. இந்தசசாதிரிசியம், ஆககவினைக்குறிப்பாககமினறியலா வென்பதிற் சிறிதே தோனறுவது காணக.

CV. கானுந தடங்காவுங் காமன படைவீடு
வானுந தோவீதி மறிகடலு - மீனக
கொடியாடை வையமெலலாங கோதணட சாலை
பொடியாடி கொனறதெலலாம பொய.

கானும்=காடும்=forests ,—தடஙகாவும்=தடத்த, விசாலித்த சோலைகளு ம் ;—காமன் for காமனுடைய காமனுக்கு ;—படைவீடு=arms-house, arsenal =ஆயுதசாலை ;—வானும=வெளியும ;—தோவீதி=தேர் (ஓடுகின்ற) தெருவும்= public high roads ;—மறிகடலும்=அலை மறிககபபட்டிருககிற சமுததிரமும்= limited ocean ;—மீன for மீனம fish=மீன உருவம் எழுதிய ,—கொடியாடை =துவசபடஙகளையுடைய ;—வையம எல்லாம்=all over the country, every where in the world=உலகமெஙகும்=உலகத்திலெங்கும ;—கோதணடசாலை =வில்லுகள் வைக்கின்றஇடம் = a depository for arrows ;—inasmuch as this is the case ;—பொடியாடி கொனறது எலலாம் பொய்=hence, *Says Damayanti*, that Siva had destroyed cupid is all nonsense, falsehood.

1. காடுகளும் பெரிய சோலைகளும் காமனுககு ஆயுதசாலை. ஆகாயமும் தேர்வீதியும் மறிகடலு (மாகிய) மீன் கொடிச்சீலை (பறககின்ற) பூமி அனைததும் வில்லு வைப்பிடம, இப்படிஇருக்க சிவன்இந்த மன்மதனைநெற்றிக்கண்ணுலெரி த்தா னென்கிற சரிததிரமெல்லாம் பொய்யாககு மென்றவாறு. 2. a கானுமகாவும்ப டைவீடு, பெயரொழுவாய் பெயர்ப்பயனிலை b. வானும் வீதியும் கடலும் (ஆகிய வையம எல்லாம் (ஓட்டுப்பண்பு) எழுவாய். கோதண்டசாலை, பயனிலை. c பொ டியாடிகொன்ற தெல்லாம் எழுவாய். பொய்பயனிலை. இங்கேபண்டையோர், எல்லாம் ஒன்றே எழுவாயென்பர். எல்லாம் பொய் என்பது கூடா தாகலின்பொ டியாடி கொன்ற தெல்லாம் எழுவாயாக வேண்டு மென்பர் புதியோர். எல்லாமெ ன்பது Grammatical Subject=எழுத்தெழுவாய் என்றும், பொடியாடி கொன் றதெல்லாம் என்பது Logical Subject=பொருளெழுவாய் என்றும் விதித்துளார் காண்க. The beneficent wisdom of the Almighty is visible every where=எல்

லாம் வல்லோனது காருண்ணியப்பிரகாச ஞானமானது எங்கும்விளங்குகின்றது ; இதிலேஞானமே எழுவா யென்னில் அதுபொய்படும் என்பர், எல்லாவகைஞானமும் எங்கும் விளங்காதா கலின். யோக்கியமான மனுஷர் எப்போழ்தும் நன்குமதிக்கப்படுவர் என்பதில் மனிதர் நன்குமதிக்கப் படுவாரென்பது பொய்யாதல் போலும். வினைத்தொகை பண்புத்தொகை உவமைத் தொகை அன்மொழித்தொகை இருமொழியாகு பெயர் இருபெய ரொட்டு பலபெய ரொட்டு பெயரெச்சத் தொடர் (வந்துநின்றோர் முதலியவற்றிற்கு வாய்பாடில்லாத) வினையெச்சத்தொடர் இத்தியாதிகளில் ஒன்றாவது பலவாவது அடையாய் வரும் எழுவாயை விசேஷணக் கர்த்தா வென்பர். தனி யெழுவாயைக் கேவலகர்த்தா வென்பர்.

CVI. கொள்ளை போகின்ற துயிரென்னுங் கோளரவின
முள்ளெயிறோ மூரிநிலா வென்னு - முள்ளங்
கொடிதிரா வென்னுங் குழையுந் தழல்போ
னெடிதிரா வாய்புலரா நின்று.

கொள்ளை போகின்றது உயிர் = my life or spirit is plundered ;—என்னும் for என்கிறாள் or என்பாள் தமயந்தி = she says ;—கோளரவின = கோளாகிய = நவக்கிரகத்தி லொன்றாகிய இராகு கேதுவினுடைய = of Raghu, one of the nine planets of Hindu Astronomy ;—முள் = கூரான = thorn-sharp ;—எயிறோ = பல்லோ = is it the tooth ;—மூரிநிலா=முரட்டுநிலவு= the rough savage moon ;—என்னும் = she says. உள்ளம் கொடிது இரா= the night is cruel by her heart=இராத்திரியானது இருதயம் கொடியது ;—(See 26th Sut. பொது Nan) ;—என்னும் = என்பாள் ;—குழையும்=குழைவாள்= தளருவாள் = she faints ;—or குழையுந் தழல்போல் = அவியும் அக்கினிபோல் ;—நெடிது = நெடிதாய் = வெகு நேரமாய் ;—இரா for இருந்து ;—வாய்புலரா = வாய் ஓயாமல் = without ceasing ;—நின்று = நீடித்து. நெடிது இருந்துவாய் திறவாது (நிலையே) நின்று தழல்போல் குழைவாள் எனினும் ஆம். தமயந்தி என்றும், என்னுமென்கிற செய்யுமென் முற்றிற்கு என்பாள எனப் பெண்பாலீறுங் கொண்டது, அதிகாரத்தால். இலக்கணக்கொத்து ஒழிபியல் சூ-ம்சூத்திரம். அதிகாரத்தால் அவாய் நிலைதன்னால் ஓசொற பொருளையுறைதற்பொருட்டால் செய்யுள் விகாரத்தாற் சிதைந்ததனால அறுவகைப் பொருளினத தொகைதன்னால் இடையி னுள்ளன வெல்லாமறை தலால் இன்னும் பலபல வேதுவினாலும் மொழி வருவித்து முடித்தனர் கொளலே. Elakkanakkottu, 3rd Sut. Ozhipiyal. 2. மூரி from முரல் to noise, *hence,* savage, rough. மூரிநிலா கோளரவின் முள்ளெயிறோ வென்பாள். இராத்திரி உள்ளங்கொடிது என்பாள். குழைவாள். நெருப்புப் போல் நெடிதிருந்து வாய்திறவாமல் நின்று தமயந்தி இங்ஙனம் நினைவாள், 3. Outline. இரா—புலரா-நின்று-என்னும், என்னும், குழையும்.

CVII. வெங்கதிரோன றனனே விழுங்கிப் புழுங்கியோ
கொஙகை யனலிற கொளுந்தியோ - திங்கள்
விரிகினற வெணணிலவால வேகினற தேயோ
வெரிகினற தெனனோ விரா.

வெங்கதிரோன்றன்னே=சூரியனே=the sun;—தன் (சாரியை);—விழுங்கி=முழுஙகி having swallowed;—புழுஙகியோ=is it by being boiled,=வெந்தோ;—கொஙகை அனலின் (5th எதுப்பொருள)=நெருப்பினுலே;—கொளுந்தியோ = கொதிப்பேறியோ=is it by being heated;—திஙகள்=சந்திரன்=moon (Nom to விரிகின்ற);—விரிகினற = பரவுகின்ற=spreading:—வெண்ணிலவால்=வெணமையான சநதிரிகையினுல்;—வேகின்றதேயோ=ஒகோவேகின்றது (agrees with இரா);—எரிகின்றது = burns;—எனனே = *Exclamation*;—இரா=இராத்திரி=Night (Nom to விழுங்கி புழுஙகி கொளுந்தி வேகினறது and எரிகின்றது.)

1. Prose இராவானது வெங்கதிரோனே விழுங்கிப் புழுங்கியோ அனலிற் கொளுநதியோ, திஙகளது நிலவினுல் வேகின்றது எரிகின்றது! இதென்ன இது!

2. Analysis of words. a. வெங்கதிரோன், இதைப்பகுபதமென்றால் என்ன? தொடர்மொழியைப பகுபத மென்னப்படாது. ஒருசொல்லேப்பகுதி விகுதியாய்ப் பகுப்பதே புடைபெயர்சசி இலக்கணமாம - வெம்மையில் மைவிகுதிகெட்டது. இது முன்னோர்கோள் - வேகும் என்பது ஆகும் ஆம, போகும் போமென்னுமாறே, வெம் எனவநத தென்பர்பின்னோர் - செம=செவந்தம. கரும் = கருகும். குறும்=குறுகும. அரும்=அருகும். b. கதிரோன்=கதிரன=கதிரான், இது பகுபதம், கதிரபகுதி + அன, ஆன=விகுதி. இப்பாட்டில பகுபதஙகள இன்னு முணடோ? விழுஙகி - புழுஙகி - கொளுநதி - விரிகின்ற - வேகின்றது - எரிகின்றது இவைகளே (Divisibles are nothing more than the inflections of nouns and verbs) பகாப்பதஙகளேசசொல்லு கொஙகை - அனல் - திஙகள் - வெண் or வெள் - நிலவு - என் - இரா, இததியாதி - பகுபதஙகளைப்புடைபெயாந்த or வேற்றுமைப்பட்ட சொறகள என்று கண்டோமாதலின், பகாபபதங்களே என்னென்போம்? பகாப்பதங்களெல்லாம் பகுதிகளேயாம்=Indivisibles are Roots. c. விழுங்கி, இதுபகுபதம், விழுங்குபகுதி, இ - செய்தென்னெசசத்து விகுதி, வந்து என உகரவிகுதி இலலே சொல்லோ? இயயும உவ்வும் பெருமபாலும செய்தெனனெசசதது விகுதிகள் - ஆய் போய் கூய் விராய மரீஇ இரீஇ இவை விகற்பங்கள். வேகினறதே, வே or வேகுபகுதி. து விகுதி. கின்று நிசழிடைநிலே. அ, சாரியை. எத்தனே உறுப்புக் கூடிப் பகுபதமாகும்? பகுதி விகுதி இடை நிலே இம் மூன்றுறுப்பும் இளவியாக்கத்திற கவசியம். எனெனில் பகுதியில்லாது சொல்லே இல்லே, விகுதியில்லாது ஐம்பால் மூவிடமில்லே, இடை நிலேயின்றிக் காலமில்லே யாதலின சாரியை சநதி விகாரமாகிய மூன்றுறுப்புகளும் இன்னேசைப பொருட்டேயாம்.

CVIII. ஊழிபல வோரிரவா யிற்றே யெனனும்
கோழிகுர லடைத்ததோ வெனனு - மாழி
துயிலாதோ வெனனுஞ் சுடர்மதியங் கானற
வெயிலா லுடலுருகா வீழ்ந்து.

ஊழி for யுகங்கள்=ages ;—பல=அநேகம் ;—ஓரிரவாயிற்றே (ஒரு + இரவு + ஆயிற்று + ஏ) ஒரோராத்திரியாயிற்றே ;—என்னும=என்பாள் ;—கோழிகுரல் அடைத்ததோ என்பாள் ;—ஆழி=கடல் ;—துயிலாதோ=தூஙகாதோ ;—என்பாள் ,—சுடா for சுடர்கின்ற=காலுகின்ற beaming ;—மதியம=சநதிரன் (Nom to கான்ற) ; கான்ற=காலுதலைச்செய்த=ககின=emitted ;—வெயிலால் + உஷ்ணத்தால் by heat ;—உடல்=உடம்பு (nom to உருகி and வீழ்நது);—உருகா=உருகி ;—வீழ்நது=சோாநது. 1. பலயுகஙகள் ஒரு இராத்திரி ஆயிற்றே வென்பாள். கோழிகுரல் அடைத்ததோ என்பாள். ஆழி (கடல) தூஙகாதோ என்பாள், கிரணஙகளையுடைய சநதிரன் எறிநத (நிலாவெனும் பெயரிய) வெயிலினால் உருகி விழுந்து எறு. உருகிவிழுநது (இன்னின்னபடி) என்பாள. ஊழிபல=பலஊழி. 2. Select the particles (இடைச்சொல) in this stanza and classify them according to the 1st Sutram of இடையியல Nannul. 1. இன்-த் - ற் - த=these are காலஙகாட்டும் இடைநிலைகள Tense - Particles 2. து-உம்- து - உம்- து - உம் - are வினைவிகுதிகள=Verbal terminations. 3. ஆல்=வேற்றுமையுருபு.

CIX. ஆடி வரிவண டருகே பறககவே
வாடி மெலிவாள வனமுலைமே - லோடிப்
பொறையாகச சோாவாள பொறுக்குமோ காமத
துறைவா யடஙகாத நோய.

ஆடி=moving about, to and fro ;—வரிவண்டு=வரி (பொருநதிய) வண்டுகள் ,—அருகே=தன அருகிலே=near her, by her side ;—பறககவே (பறக்க + ஏ)=பறந்தபொழுது (Infinitive requiring *when* in English) ;—வாடிமெலிவாள்=வதங்கிநைவாள் ,—வனமுலைமேல் ;—ஓடி = ஏஙகியெனகிறபடி ;—பொறையாக=பளுவாக=like a great weight, heavily ;—சோாவாள=தளர்வாள் ;—பொறுக்குமோ=சகிப்பாளோ ;—காமத்துறைவாய்=இச்சையினது வழியின் கண் (உண்டாகின்ற) தணியாத நோயினை, எறு. 1. இநதப்பாட்டுக்களும் முன்போன பலகவிகளும் இனிமேல் வரும் அநேக வெண்பாககளும அகப்பொருளில் காமததுறைய வாதலால் அப்போப்பட்ட ஞானத்திற்கு வேண்டியமுதற்பொருள்கள் (principles—rudiments) சிலபல உண்டு, அவற்றை வெறுஙகிளவிகளால் சொன்னால், இன்னதற்கிது வென்கிற சிறப்புணாவு பிறக்கமாட்டாது. இநநூல் ஆங்கிலேயகாளுக்கும இந்துக்களில் ஆஙகிலேயமபயின்ற போகட்கும் நாளுமதஸ்தருக்கும் பொதுப்படப் பரிக்ஷைப் புஸ்தகமாய் நிறகின்றமையால் சொல்லிலக்கணமும ஆாததமுமாததிரம் ஒருவாறு காட்டினோம். அந்தந்தப்பாட்

டிற்கும் ஒரு ஒரு தொகியர்த்தமுண்டு, ஆர்த்தாபத்தியாயும் குறிப்பாயும் சாதிரிசிய மாயும காமகச்ருசதுகளைக காட்டுகின்ற வெண்பாக்களுக்கு (analysis) வாக்கியா ஙகம் வாக்கியசமேதம ஏகவாக்கியம பின்னவாக்கிய மிசுதியாதிகளை அவ்வப்பாட் டின சஙகதியை வெளிப்படையாய்க்கூறுது விளக்குவதுங் கூடாதென்றறிக.

CX. ஈர மதியே யிளநிலவே யிஙஙனே
சோர்குழலின மீதே சொரிவதென - மாரன
பொரவளிததான கணணி யுனககுப புலரா
விரவளிததா னலலனே வினறு.

ஈரம்=குளிர்ச்சி=chill ;—மதியே=திஙகளே = நிலாவே=O moon ;—இளநிலவே=O young moon or tender beams + or இளநிலவையே (acc ) gov. by சொரிவது ;—சோர்குழலின் மீதே=சோர்கின்ற கூந்தலாளாகிய தமயந் தியின் மேலே or என்னுடைய தலையினமேலே :—சொரிவதென்=சொரிவது= கொட்டுவது என்=why pour ? ;—மாரன்=மதன் ;—பொர=போரிட to fight, to harass ; — அளிததான = வண்டுதான் = வணடுகளதாம்= there are these bees ;—கண்ணி=கணணியிலே=மாலையிலே=பூமாலையில் in the garlands ;—உனக்கு (நிலவாகிய) உனககு .—புலரா for புலராத=விடியாத=never dawning ;—இரவு=இராததிரியை ,—அளிததான = கொடுததான் ,—அலலனே= அல்லவோ (or நலலனே, அவன் கொடியன் அல்லவோ என்றபடி) ;—இன்று=இன்றைககு எனக்குப போராகப் பூமாலையிலே வண்டுகளை இட்டான், தன்கருப் புவில்லுககு நாண வணடாதலின. உனககு விடியாத இராததிரியா யிருககவுஞ் செயதானெனனனில இரண்டும் எனககுக காமோததீபன மெனபடி. கண்ணியை அளிததானெனனறு சேரயுஙகொளக.

CXI. தாஙகு நிலவின றழலபோயத தலைகொளளத்
தேஙகுழலசேர வணடு சிறைவெதுமப - வோஙகுயிரடபிற
றூமங கரியாக தனியே தளாகினறுள
யாமங கரியாக வினறு.

தாங்கும் = தாஙகுகின்ற = தாககுகின்ற = உறைககின்ற ;—நிலவின் தழல் போய்=சநதிர வெப்பமானது சென்று ;—தலைக்கொள்ள=உசசிவரையில்ஏற ;—தேஙகுழல்சேர்வண்டு=வாசனைபொருநதிய அளகததில இருக்கும் வண்டுகள ,—சிறை வெதும்ப=அவறறது சிறகுகள் (வெதுமபிப்போக) வேக, அவ்வேக்காட் டினுல் எங்கிவிட்ட மூசசினுல் பூமாலை கரியாக (தன்னநதனியே) ஒணடியாய் வாடுகின்றுள் ஆர்த்தராததிரி சாக்ஷியாய் இன்றைய தினததில எறு. 1. தாங்கும் affecting, influencing. 2. தலைக்கொள்ள to overpower, to fill, to get up to head. 3. ஓஙகுயிர்ப்பு *hot breath*, sighing. 4. கரி=சாக்ஷி witness. 4. தழல்போய்த் தலைககொள்ள— வண்டு சிறைவெதும்ப — வண்டு ஓங்குயிர்ப்பின, தாமங்கரியாக=that the garlands be burnt to ashes (charcoal),—தளர்கின்றுள் தமயந்தி.

CXII. மையுற கண்ணருவி வாரவளை சோரக்
கையிற் கபோலத் தலம்வைத்து - மெய்வருந்தித்
தேனிருந்த பூங்கணையே தீயாகத் தேமொழியாள்
தானிருந்து செய்வாள் தவம்.

மை=ink, black paste for eyes ;—உற = பொருந்திய = rubbed, applied ;—கண் அருவி வார=கண்ணீர் வடிய=tears running down ;—வளைசோர =வளையல்கள் கழல ;—கையில் கபோலத்தலம் வைத்து=resting her head or cheeks upon her hand ;—மெய்வருந்தி=உடம்பு நொந்து ;—தேன் இருந்த(பூங்) கணையே=honey dropping flower arrows ;—தீயாக = நெருப்பாக burning like fire ;—தேமொழியாள் (தேம் + மொழி + ஆள்)=Damayanti ;—தான= herself ;—இருந்து=sitting ;—செய்வாள்=performs ;—தவம் for தவத்தை= penance. From 97th to 125th Stanza, the poet describes night according to the principles of love-science (அகப்பொருள்). Darkness, solitude, moonlight, bees, garlands, starry sky, Andril bird, roaring ocean, cool breeze, chill wind from the north are objects of complaint. 1. அருவி=cataract, water fall. 2. கபோலம்=கன்னம் cheek. 3 கணை=அம்பு arrow. 4. கண்ணீர் வடிய கைவளைகழல கைமேல் கன்னத்தைச் சாய்த்துக்கொண்டு உடம்பு ஒடுங்கி புஷ்பபாணமே நெருப்பாயெரிய தேமொழியாளாகிய தமயந்தி தனித்திருந்து தவஞ்செய்கிருள் எறு. A fit allegory.

CXIII. அள்ளிக் கொளலா யடையத்திரண் டொன்றாய்க்
கொள்ளிக்கும் விளளாத கூரிருளா - யுள்ளம்
புதையவே வைத்த பொதுமகளிர் தங்க
ளிதயமே போன்ற திரா.

அள்ளிக் கொளலாய்=அள்ளிக் கொள்ளும் படியான அவ்வளவு தடிப்பாய் (குழம்பா யென்கிறபடி=so thick, so rich ;—அடையத்திரண்டு ஒன்றாய்=தடித்து ஒண்ணுகூடி=being reduced to a gross mass of fluid ;—கொள்ளிக்கும் விள்ளாத=கொள்ளிக்கட்டை நுனிநெருப்புக்கும் தெரியாத ;—கூர் இருளாய= thick deep inpenetiable darkness that fire at the end of a fire brand could not be discerned ;—உள்ளம் புதையவேவைத்த=சித்தம் அமிழ்ந்திக் கிடக்கும்படி ஆழத்தில் வைத்திருக்கிற ,—பொதுமகளிர் தங்கள்=of common women ;—இதயமே போன்றது=is similar to their hearts kept down so deeply interred ;— இரா=this night. 1. அள்ளல்=சேறு=குழம்பு=thick fluid. அள்ளிக்கொளல் put for அள்ளல். 2. அடைய=gathered close, gross. 3. கொள்ளிக்கும் விள்ளாத=not descernible even to fire brand கொள்ளி=meteor. 4. புதைய Infinitive adverbial ; secretly, treacherously, clandestinely. 5. இதயம்=இருதயம்=ஹ்ருதயம=heart.

CXIV. ஊக்கிய சொல்லரொல்க்குந் துடிக்குரலர்
வீக்கிய கச்சையர் வேல்வாளர் - காக்க
விடையாமங் காவலர்கள் போந்தா ரிருளின்
புடையா யிருள்புடைத்தாற் போன்று.

ஊக்கிய=ஏறிய daring, raised up ;—சொல்லர்=சொல்லையுடையோர்=those who speak ;—ஒலிக்கும்=சப்திக்கின்ற thundering ;—துடிக்குரலர்=உடுக்கையினது வெடித்த சத்தம்போலும் சத்தஞ் செய்வோர் ;—those making loud noise like kettle drums ;—வீக்கிய=கட்டிய=விசித்த=இழுத்துக் கட்டிய=girded ;—கச்சையர்=கச்சைகளை யுடையோர் ;—வேல்வாளர் for வேலர் and வாளர் (வேலினர் - வாளினர்)=those holding lances and swords ;—காக்க=ஊரைக் காப்பாற்ற ;—இடையாமம் for நடுச் சாமத்தில் in the mid of night ;—காவலர்கள்=guards, policemen (in apposition with சொல்லர் குரலர் கச்சையர் வேல்வாளர்)=காவற்காரர்கள் ;—போந்தார்=வந்தார்=புறப்பட்டார்கள் ;—இருளின் புடை=இருளோடே with darkness or against it ;—இருள் புடைத்தாற் போன்று=இருளானது இடித்தாற் போலே=மோதினாற்போல்=as if darkness hit against darkness It is midnight now. The whole nature sleeps, but Damayanti can hear policemens' voise.

இருளோடு இருள் இடித்துக் கொண்டாற் போல்காக்கப் புறப்பட்டார்கள் யாரென்றால், ஊக்கமாய வார்த்தை சொல்வோ ராகிய, வெடிக்கும துந்துபி போற்குரல் காட்டுவோராகிய, இடைக்கட்டுக் கச்சைகட்டி யிருக்கிறவர்களாகிய, வேலராகிய வாளினராகிய, நடுச்சாமக்காவற்காரர்கள் என்க. 1. வேல்வாளர் implies, one and the same person held both. 2 இருளின்புடை &c. Either they were dressed black, or were painted so. 3 Outline. காவலர்கள் யாமங்காக்க போன்று போந்தார். காவலர்கள்=kings, for they themselves used to go with their policemen.

CXV. சேமங் களிறுபுகத் தீம்பாலின் செவ்வழியாழ்
தாமுறை ளுறைபுகுதத் தார்வண்டு - காமனுடை
பூவாளி யைந்திற் புகத்துயில் புக்கதே
யோவாது முந்நீ ருலகு.

சேமம் (க்ஷேமம் again)=stables (loc) ;—களிறு=யானைகள் or the males of any of the lower animals ;—புக=போக to enter, to take their rest ;—தீம்பாலின்=தித்திப்பான பாலின் இனிமைகொண்ட=sweet like milk ;—செவ்வழியாழ்=the musical instrument so called ;—தாம :—உளளுறை for உறையுள்=into their cases or bags ;—புகுத=புக=அடங்க=to be locked up ;—தார்வண்டு for மாலையில் வண்டுகள்=bees in garlands ;—காமன்தன் பூவாளி ஐந்தில்=into those five kinds of flower arrows of kaman ,—புக ;—துயில்புக்கதே=தூக்கத்திற் புகுந்தது=தூங்கிற்று=slept ;—ஓவாது=வருந்தாமல்=uninter

ruptedly, without care,—முந்நீருலகு=the earth or world of three waters.

1. யானைகள் தங்கள் (சேமத்தில்=சேவகத்தில்) ஆலயத்தில் போயப்படுக்க (புக Infinitive, *while*) தீப்பாலபோல் (மதுரமான) செவ்வழி (ப்பண்கள்பாடும்) வீணைகள் (தாம்) தங்கள் உறைகளிலே போய்ச்சேர (புகுத vulgar form) மாலையில் உள்ள வண்டுகள் காமனுடைய ஐந்து வகைப்பூ அம்பிலே போய்ப்புகுந்திருக்க நித்திரைபோகின்றது சலிப்பில்லாமல் கடல (சூழ்) உலகமானது. எறு.

2. Outline. களிறு சேமம்புக யாழ்உறைபுகுத வண்டு வாளிஐந்திற்புக உலகு துயில்புக்கது 3 துயில் புகதது classical usage=நித்திரைபோகிறது *to go upon sleep*, is a colloquial idiom. நித்திரை பண்ணுகிறது=to make sleep. But போசனம்பண்ணுகிறது=to make food, is not *to cook* but *to eat*. 4 ஓவாது=undisturbed ;— 5. சேமம் or சேவகம்=dormitory for elephants.

CXVI. ஊனறின் றுவகையா லுள்ளவுயிர புறமபே
தோன்றுங் கழுதுந் துயின்றதே - தானற
னுரைசோரச் சோர வுடல்சோர வாயி
னிரைசோரக் கைசோர நின்று.

ஊன் for மாமிசம flesh, human flesh, (acc) ;—தின்று ;—உவகையால்=*by with* greediness (prepositional word for adverb)=greedily ;—உள்ள for உள்ளான (அந்தரதானமான) உயிர்=spirit ,—புறம்பே=outward, externally ;—தோன்றும்=காணும்=visible, actually appearing ;—கழுதும்=பேயும, even devils ;—துயின்றதே=தூங்கிறதே ,—எப்படித் துயின்றதென்றால் ;—தான் (the devil itself) ;—தன் its, his ;—உரை=speech or spell (also உயரசி=height ie visible appearance) nom to சோரச் சோர = the more it diminishes ;—உடல் சோர=that the body may diminish ;—வாயின் இரைசோர=that the prey in his month may also disappear ;—கைசோர நின்று=standing quite dissatisfied. தூக்கத்திற் குளறிக்குளறி யென்றபடி.

1. ஊனை (மாமிசத்தை) தின்று (மேலும) அதிக ஆசையால் அந்தரமாயிருக்கப்பட்ட (spiritual) தன உயிரானது பகிரங்கிருதியாய்த் காணுகின்ற பைசாசங்கூடத் தூங்கிறதே, எப்படியெனில், தின்று தூங்கிறது, எப்படி நின்று : கைசோர நின்று=leaving or slipping the piece of flesh from his hand as he fell asleep. என்கைசோர ? வாயின் இரைசோர (Infinitive causal, reducible to 5th case of Verbal noun of the same verb=சோரநததினுல்). ஏன இரைசோர ? உடல்சோர=because his assumed frame vanished. ஏன உடல்சோர ? தான தன் உரைசோரச் சோர. 2. In spite of spells, the devil too sleeps, why cannot I sleep, *says Damayanti.*

3. This is a disputed stanza. Students anxiously desiring to know about தான் தன் உரை சோரச்சோர, are referred to the more enlightened thoughts of Europeans. See Calmets' Phantom World or the Philosophy of Ghosts.

4. உள்ள=*internal, inverse*, not *that is*, notwithstanding a Relative Participle in both ways. 5. Better is the popular interpretation, that கழுது - தான் - தன should be taken collectively, ie.a number of evil spirits in a *burning ground* (சுடுகாடு Hindu cemetry) anxious to get away soon from sorcerers' spell, devour their prey in great haste talking to each other indistinctly as they fell asleep.

CXVII. அன்றி லொருகண் டுயிலமற் றொருகண்ணாவத்தா
லின்றுணைமேல் வைத்துறங்கு மென்னுஞ்சொ - லின்று
தவிர்ந்ததே போலரற்றிச் சாம்புகின்ற போதே
யவிழ்ந்ததே கண்ணீ ரவட்கு.

அன்றில்=the Andril-bird ;—ஒருகண் துயின்று = ஒருகண் (ணால்) தூங்கி ;—ஒருகண்ணை=மற்றொருகண்ணை ;—ஆவத்தால் = அன்பினால் ;—இன்துணைமேல் வைத்து=தன் இனிய (sweet) பெட்டையின் மீது (consort) வைத்துக்கொண்டு ;—உறங்கும் என்னும் சொல்=the old saying that it sleeps as described above ,—nom to தவிர்ந்ததே ;—இன்று =to day ie to night ;—தவிர்ந்தது + ஏ=failed, became falsified ,—போல்=as if ;—அரற்றி=புலம்பி = lamenting ,—சாம்புகின்றபோதே=ஒடுங்குகின்றபோதே as she was pining ;—அவிழ்ந்தது+ஏ=loosed, fell ;—கண்ணீர் ;—அவட்கு for அவளுக்கு=to her.

1. அன்றில் பக்ஷியானது தன் ஒருகண்ணால் தூங்கி மற்றொருகண்ணை அன்பினால் தன் இனிய துணையின்மேல் வைத்துக்கொண்டு தூங்கும் (என்னும்= conjunction *that* of a complex sentence) இந்தப்பழமொழியானது இன்றைய தினத்தில் பொய்த்தது அங்ஙன (போல்) மாகப்புலம்பி ஒடுங்குகின்றபோது அவளுக்குக்கண்ணீர் உதிர்ந்தது. 2. Nominative to அரற்றிச் சாம்புகின்ற போதே, is Damayanti to be supplied. 3. கண்ணீர் Principal Subject. அவிழ்ந்தது Principal Predicate.

CXVIII. ஏழுலகுஞ் சூழிருளா யென்பொருட்டால் வேகின்ற
வாழ்துயர மேதென் றறிகிலேன் - பாழி
வரையோவென் னுநெடுந்தோள் மன்னவோ தின்னு
மிரையோ விரவுக்கி யான்.

ஏழ் உலகும் seven worlds (Nom to சூழிருளாய்) ; — சூழ் இருள் ஆய = சூழ்ந்த இருட்டாகி = all dark ஆகிறபடி ,—என் பொருட்டு ஆல்= என்நிமித்தம் = எனக்கென்றே = on my account ;—வேகின்ற = இருளாயவேகின்ற = burning, boiling ;—ஆழ்துயரம் ஏது என்று அறிகிலேன் = I know not whence this *deep sorrow*, heavy intolerable pain ;—பாழி (broad) வரையோ (is it a hill) எனும் (*for, as, like*) நெடும் தோள் மன்ன (voc) ஓ (interjection) ;—தின்னும் இரையோ = eatable prey ;—இரவுக்கு = to night ;—யான் = நான் am I ? 1. பெரிய மலையோ இதென்று நினைக்கும்படி நீண்ட தோளையுடைய அரசே (நளனே) 2. ஓ=அவல பொருட்டு= misery, appeal.

CXIX. கருவிக்கு நீங்காத காரிருளவாயக கஙகு
லுருவிப் புகுநதது லூதை - பருகிககார
வணடு போகட்ட மலாபோன மருண மாலை
யுணடு போகட்ட வுயிாக்கு.

கருவிக்கும்=இரும்பு முதலிய எநத ஆயதத்துக்கும்=to any instrument,—நீங்காத=விள்ளாத=impassable, impenetrable ;—கா இருள்வாய்=கறுதத இருட்டிலே ;—கஙகுல் for கங்குலை=இராத்திரியை; உருவி=ஊடுருவி piercing ;—புகுந்தது=நுழைந்தது ;—ஆல்=அசை ;—ஊதை=ஊதற் காற்று = chill wind ;—Nom to உருவி and புகுநதது ;—பருகி=குடித்து=தேனைக்குடித்து ;—கார்வண்டு ;—(Nom to குடித்து) ;—போகட்ட மலர்போல்=போகவிட்ட பூப்போல் = like the flower whose sap the black bees had sucked up and threw away ;—மருள் மாலை=love-giddy evening (Nom to உண்டு and போகட்ட) ;—உணடு=drinking ;—போகட்ட=போகவிடப் பட்ட or போகுதலினல் (முதனிலைத் தொழிற் பெயர் - முனருவது தொகை) அட்ட=அடப்பட்ட=காய்ந்துபோன=சக்கையாகிய=withered ;—உயிாக்கு=என் ஆவிககு=to my spirit. 1. கார்வண்டு (தேனைப்) பருகிப்போட்டு விட்ட பூப்போல், அந்திப் பொழுதினல் உறிஞ்சி விடப்பட்ட என் ஆவிக்கு (ஆவிக்குளளே) குளிாவந்து புகுந்தது ;—எப்படி புகுந்தது ? உருவிப்புகுநதது எதை உருவி ? கஙகுலையுருவி. எதனிடததில் ? இருளிடததில். எப்படி இருள ? காரிருள். எப்படி காரிருள்? நீஙகாத காரிருள். எதற்கு நீங்காத ? கருவிக்கும நீஙகாதகாரிருளினிடததில or காரிருள் வழியாய்க் கங்குலை உருவி என் உயிர்க்குள புகுநதது, எறு. I was already exhausted by 6 or 7 the previous evening, much more now 2. O'clock A. M.

CXX. எழுநதிருக்கு மேமாநது பூமாந தவிசின்
விழுநதிருக்குந் தனனுடம்பை மீளச - செழுநதரளத
தாஞோடு சேர்ககுந் துணையேது மிலலாதே
நாஞோடு நின்றழிவா ளைநது.

எழுந்திருக்கும்=எழுந்திருப்பாள் ;—ஏமாந்து=மிகக்களித்து anxiously expecting ;—பூமாந்தவிசின்=பூக்கள் பரப்பியபெரிய விசிப்பலகையில=கட்டிலில் upon the flower-spread cot ;—விழுந்திருக்கும்=விழுந்து இருப்பாள ;—தன் உடம்பை ;—மீள=again=மறுபடியும் ;—செழும + தரள (ம=முதது) த்தாண் + ஒடு=முத்துக்கள் பதிததது தாணுடனே ;—சோக்கும் = சோபபாள் ;—துணை ஏதும் இல்லாது + ஏ=யாரும் துணை (companion) இல்லாமலே ;—நாண் + ஒடும்=வெட்கத்துடன் ;—நின்று அழிவாள் ;—ஐந்து=மெலிநது. 1. துணை ஆருமில்லாமல் ஐநது நாஞோடும் நின்று அழிவாள் ஏமாந்து எழுநதிருப்பாள், பூந்தவிசிலே விழுந்திருப்பாள். தன்னுடம்பை மறுபடி செழுமையாகிய முத்துக்கள் அழுத்திய தாஞோடு சேர்ப்பாள எறு. 2 தவிசு=விசிபபலகையென்பார் சேஞைட்டார.

CXXI. விரிகின்ற மெல்லமளி வெண்ணிலவின் மீதே
சொரிகின்ற காரிருள்போற் சோரும் - புரிகுழலைத்
தாங்கும் தளரும் தழலேநெடி துயிர்க்கு
மேங்கும் துயரோ டிருந்து.

விரிகின்ற=பரம்புகின்ற மெல்லமளி=மிருதுவான சயனம் or படுக்கை for படுக்கையாகிய=bed ;—வெண்ணிலவின்மீதே=upon moon-light cot ;—சொரிகின்ற சுறுத்த இருளைப்போல் ;—சோரும் for சோருவாள் ;—புரிகுழலை= சுருளாகிய - கட்டிய - அழகிய அளகத்தை ;—தாங்கும்=சுமப்பாள் or கையால் தாங்குவாள் ;—தளரும் = மெலிவாள் ;—தழலே = நெருப்பையே,—நெடிதுயிர்க்கும்=உயிர்ப்பாள்=பெருமூச்சு விடுவாள் ;—ஏங்கும் = திகைப்பாள் ;—துயரோடு=துக்கததுடன் ;—இருந்து waiting impatiently. Stanzas the context of which sides more on the *third person* are Authors' remarks, but those susceptible of the *first person* belong to Damayanti. படர்க்கையாய்ச் சாயும் பாட்டுக்களைத் தமையந்தியைக் குறித்துப் புகழேந்தி கூறுதலாகவும் தன்மையிடந்தோன்றும் அவற்றைத் தமயந்தியே சொல்வதாகவும் கொள்க. 1. அமளி= கட்டில்=மெத்தை=cot or bed. 2. புரிகுழல்=platted hair ie. Damayanti *by secondary intent.*

CXXII. உடைய மிடுக்கெல்லா மென்மேலே யோச்சி
விடிய மிடுக்கின்மை யாலோ - கொடியனமேன்
மாகாதல் வைத்ததோ மன்னவர்த மின்னருளோ
வேகாத தென்னோ விரா.

உடைய=உண்டான=in possession=that இராத்திரி had in her command ;—மிடுக்கெல்லாம்=எல்லாமுடுக்கினையும், முறுக்கையும்+briskness ;—என்மேலே ;—ஓச்சி=ஓட்டி=செலுத்தி=having directed ;—(அங்ஙனம ஓச்சியது பற்றி) விடிய=பொழுது விடிய ;—மிடுக்கு இன்மையாலோ=சக்தி இல்லாதபடியி னாலேயோ ;—கொடியன்மேல்=கொடியனாகிய மன்மதன்மேலே=upon the cruel cupid ;—மாகாதல்வைத்ததோ=(பெரிய) அதிகப்பிரியததை வைததேதோ ;—மன்னவர்தம்=இராசாக்களுடைய ;—இன் அருளோ=இனியதயையோ Is it the favour of kings ? ஏகாதது=போகாதது = தொலையாதது = விடியாதது ;—என்னோ=ஏனோ=என்னமோ=என்னவோ ;—இரா or இராத்திரியானது.

1. இராத்திரியானது தன்னிடத்திலிருந்த எல்லாமுடுக்கையும் (முறுக்கையும்) என்மேலே செலுத்தி, அங்ஙன மெல்லாஞ் செலுத்தப்பட்டுத் தீர்ந்ததனால், தான்பொழுது விடியச்சததியில்லாமையினாலோ தொலையாமல் நீடித்துக்கொண்டிருக்கிறது ? கொடியனாகிய மன்மதன்மேலே மெத்தவும் ஆசைவைத்ததோ இராத்திரியானது ? அரசரது (or நளனுடைய) நல்லதயவோ இராத்திரி போகாதிருப்பது ? என்னோ ! எ-று. 2 மிடுக்கு brisk, power, severe, air of consequence &c., 3. இன்மையால், வருதலால், நிற்றலால் இத்தியாதித்தொழிற்பெயர் மூன்றும் வேற்று

மைகட்கு இங்கிலீஷில் because என்று மொழிபெயர்ப்பு வரும்; வருகையில் நிற்கையில் என்னுமிதநியாதி தொழிற் பெயரோழாம் வேற்றுமைகட்கு when, while என்பன வருமாறே யென்றறிக. 4. மன்னவர்தம்=தன் - தம - இவற்றைச்சாரியை யென்னாது இலக்கியத்துக்குரிய ஆறுவதுருபு என்க (classical genitive). Partitive form என்னப்பட்ட, இவாதமமுள இத்தனேபோ என்று (one of the number—two of the class boys) பிரித்தெடுக்கு மிலக்கணத்திறகு தகுந்தசொல்லாய் விளங்கு கின்றன இந்த தன்–தம் என்னுஞ் சொற்கள். எந்த ஏழாம வேற்றுமைப் பன்மைக்கும் இந்தத்தத்துவ (ஆற்றல்) முண்டென் றறிக. சுடம பாட்டில் எங்களிலேகூட்ட, எங்களிலே ஒருத்த னுக்குச்சூட்ட என்பதை எங்கள் தம்முள் ஒருவற்கெனறு வரும வாய்ப்பினை யுடையது செய்யுணடைப் பெரும்பான்மையென்க. முன் ஆறுவதுருபென்றதற்குத் தானதாம என்னும் விரவுபெயர்கள் (Epicenes) ஆறுவதில் தன் தம எனத் தாமே கிடக்கின்றமையால் கண்டுகொள்க.

CXXIII. மயங்குந தெளியு மனநடுங்கும் வெய்துற

றயஙகும வறிதே யுலாவும - வயங்கிழைபோயச

சோரும் துயிலுந துயிலாககரு நெடுங்க

ணீரும கடைசோர நின்று.

மயங்கும்=மருளுவாள்=சந்தேகிப்பாள் = doubteth ;—தெளியும=தெளிவாள்=தேறுவாள்=takes courage ;—மனமநடுங்கும=இருதயம நடுங்குவாள்= trembeth in heart ;—வெய்து உறறு = வெயதாகி or வெயதினைப்பொருநதி= getting heat *literally* ;—being heated, extremely affected + (கொதிப்பேறி யென்றபடி) ;—உயஙகும்=உயங்குவாள்=வருநதுவாள்=is vexed ,—வறிதே= வெறிதே=வறுமையாய்=வெறுமையாய்=emptily ie. stupid, stupified, madman-like,—also *incessantly* சுமமா or ஓயாமல் எனகிறபடி ;—உலாவும=உலவுவாள்=சுற்றுவாள்=walketh, roundeth :—வயஙகிழைபோய்=வயங்கு+இழை + போய் = glittering jewels being gone, ie becoming loosened + (nom absolute) ;—சோரும் = சோருவாள் is exhausted ;—துயிலும= துயிலுவாள= தூங்குவாள் = sleepeth (but a little) ;— துயிலாக்கரு நெடுங்கண்=sleepless black broad (நெடுமை) eyes ;—நீரும் (நீர்வேன் - வாய - வான் - வாள் - நீரும்) நீர்வாள்=sheds tear ;—கடை for கடைக்கண் ;—சோரநின்று = வடியநின்று ! தமயந்தி கண்நீருவாள் or தமயநதி கண்நீரும. தமயநதி எழுவாய்க்கு மற்றையசெய்யுமென் முற்றுக்களைக்கொண்டு, நெடுங்கண் எழுவாய்கது மாததிரம் நீரும் என்பயனிலையை கொள்ளாதுபோதல் கூடாதெனறு நீருவாள் என்றேம. நீர்த்தல்= நீராதல் ; கட்டிமுதலிய நீர்த்தல்போல் துயிலாக்கரு நெடுங் கண்கள் கடைசோர நின்று நீர்த்தன. இதனுள் தனித்தனிச்சிறிய வாக்கியங்கள் தெளியக கிடக்கின்றன.

CXXIV. விழுது படத்திணிந்த வீங்கிருள்வாயப் பட்டுக்
கழுதும் வழிதேடுங் கங்குற் - பொழுதிடையே
நீருயிர்க்குங் கண்ணோடு நெஞ்சுருகி வீழ்வார்த
மாருயிர்க்கு முண்டோ வரண்.

விழுது=குழம்பிலும் செறிந்தசேறு=விழுமியது = thick liquid, paste ;— பட to be, (componnds of பட are adverbs, as, கிழமைபடவாழ் live usefully, நயம்படவுரை speak kindly, reasonably, இடம்படவீடிடேல் build not your houses spaciously, roomy) விழுதுபட = thickly condensed ;—திணிந்த=அடைந்த=நெருங்கின=compact, compressed ;--வீங்கிருள்=வீங்கிய இருள்=தடித்த இருட்டு=swollen darkness (so dark beyond expression என்றபடி) ;— வாய் in or at (locative form) ;—பட்டு for அகப்பட்டு=happening to fall ;— agreeing with கழுது ;—கழுதும் (கழுது + உம்)=even Satan who is darkness himself; வழிதேடும்=மார்க்கம் பார்க்கும்=looking for way ; feeling his steps என்கிறபடி ;—கங்குற்பொழுதிடையே=இராத்திரி வேளையில் ;—நீர்உயிர்க்கும்+ *breathing* for *watering*+கண்ணோடு ;--நெஞ்சு+உருகி their hearts melting ;— வீழ்வார்தம் (classical genitive) விழுவோருடைய ie கரைகிறவர்களுடைய for ஸ்திரீசனங்களுடைய ;—ஆருயிர்க்கும்=ஆவிக்கும் ;— உண்டோ = இருக்கிறதோ ;—அரண்=காவல் Is there any watch over them ? No, their watch-guard is Satan himself in whose kingdom-darkness-they live !

1. Paraphrase கழுதும், (Nom) விழுது படத்திணிந்த வீங்கிருளில் அகப்பட்டு (Predicate) வழிதெரியாமல் தடவும் இராத்திரிப்பொழுதிலே, கண்ணீருதிர்க்குங் கண்களும் நெஞ்சம் உருகிக் கரைவாராகளுடைய ஆருயிர்க்கும் உண்டோ (Interrogative Predicate Principal) அரண் Principal Subject. எறு. Interrogative sentence. 2. Outline. அரண் உண்டோ? இல்லையென்கிறபடி. எதற்கு உண்டோ? ஆருயிர்க்கும் ஆருடைய ஆருயிர்க்கு? வீழ்வாருடைய : எப்படி வீழ்வா ருடைய? நெஞ்சுருகி ;—எதனோடுங்கூட? நீர் உயிர்க்கும் (உதிர்க்கும்) கண்ணோடு. எப்போ? பொழுதிடையே. எந்தப்பொழுது? கங்குற்பொழுது, எப்படிப்பட்ட கங்குல்? தேடுங் கங்குல். என்னதேடும்? வழிதேடும் - எது வழிதேடும்? கழுதும் = பிசாசும். எதிற்பட்டு? வாயப்பட்டு- எதன்வாய்ப்பட்டு? இருள்வாய்ப்பட்டு. எப்படிப்பட்ட இருள்? வீங்கிய இருள்வாய். எபபடி வீங்கிருள்? திணிந்த வீங்கிருள். எப்படித்திணிந்த? விழுதுபடத்திணிந்த வீங்கிருள். இப்படிப்பட்ட இருளிலே அகப்பட்டுப் பேயும்வழிதேடும் படியான அவ்வளவு கருக்கிருட்டில், ஆருயிர்க்கும் அரணுண்டாங்கொல்லோ. The moon had set long ago. Morning comes on in the next stanza.

CXXV. ¶ பூசுரர்தங் கைம்மலரும் பூங்குமுதமும் முகிழ்ப்பக்
காசினியுந் தாமரையுங் கண்விழிப்ப - வாச
மலர்ந்ததேங் கோதையா ளாழ்துயரத் தோடு
புலர்ந்ததே யற்றைப் பொழுது.

பூசுரர்தம் (பூ earth + சுரர் gods, தம் *of* = வேதியருடைய ;—கைம் ம லரும = கைகளாகிய புஷ்பங்களும் ;—பூங்குமுதமும = பூவிய=அழகிய அல் லிகளும் *moon lilies* ;—முகிழ்ப்ப = முகிழ்க்க = மூட = கூமப = வாட to shut, close their petals ;—காசினியும் for உலகத்தோரும் or மனுஷரும் ;—தாமரையும் = lotus or *Sun-lilies* ;—கண்விழிப்ப = விழிக்க = to open their eyes ie from their sleep ;—வாசம அலர்ந்ததேம கோதையாள் = கோதை யாளு டைய of Damayanti ;—ஆழ் துயரத்தோடு = ஆழ்கின்ற தொலைந்து போகததொ டங்குகின்ற விரகதாபத் துடனேகூட ie சந்தோழா ரம்பத்துடனே ;—புலர்ந்த து = விடிந்தது = dawned + ஏ ;—அற்றைப் பொழுது = அன்றைய இராத்திரி ப்பொழுது. 1. வேதியர்க ளுடைய கரமலர்களும அழகிய அல்லிப்பூக்களும கூம்பும் படியாய் (பிராதக் காலத்தில வேதியர் தங்கள்கைகளைக் கூப்பித தொ ழுவாராதலின் - அல்லிகள் சூரியனுககு வாடுமாதலின்) உலகமும் (உலகததோ ரும்) தாமரைகளும் கண்விழிக்கும் படியாகவும், வாசனைமலர்நத தேன்மாலையா ள் தமயந்தியி னுடைய, தொலைந்து போகின்ற விரகதாபத் துடனே (அதாவது களவொழிக்கத் தொடங்கும் சநதோஷத் துடனே) அன்றைய இராத்திரிப் பொ ழுது விடிந்த தென்ற வாறு. 1. முகிழ்ப்ப-விழிப்ப-பொழுது புலர்நதது. 2. ஆழ் துயரத்தோடு பொழுதுபுலர்ந்தது. 3. பொழுது புலர்ந்தது = எழுவாய் பயனிலை (a bare predicative combination without any objective relation) 3. கைம் மலரும் பூங்குமுதமும nom to முகிழ்ப்ப. காசினியும் தாமரையும் விழிப்ப. 4. முகிழ்ப்ப and விழிப்ப together with their enlarged subjects are attributives (தத்தம் தனித்தனி வினைமுதல்க ளோடுகூடிய செயவெனனச் சஙகள்) to புலர்ந்தது. 5. ஆழ்துயரத்தோடு (prepositional phrase as an adverb or extension of the predicate) புலர்ந்தது. 6. சூரியனுக்கு அல்லி கூம்புதலும தாம ரைமலர்தலும், காலையிற் கைம்மலர் வேதியர்க்குக கூம்புதலும், இரவும் நிலவும் பூவும் வண்டும் கரும்பும் முன்னிலவும் மன்மதனும் புஷ்பபாணஙகளும் தனிமை யும் தாபமும் ஆசை மிகுதியாற் சிறுபொழுதைப பெரும் பொழுதென்று புலம்பு தலும், குளிர்ச்சியை நெருப் பென்னலும, மன்மதனைக் கொடியன் என்பதும்ஆ கிய இத்தியாதிகளைக் குறித்தும், இவைபோல்வனவாகிய=வயங்கிழைகள் வளை யல்கள் கையிற் கழன்று போதல், வறிதேயுலாவுதல், தழல்போய்த் தலைக்கொள் ளல், கையிற் கபோலத்தலம் வைத்தல், ஊதைபொருது புலம்புதல், அன்றிற்பட் சியை நினைத்துக் கூறுதல், அன்னமுதலிய வற்றிற்குசசெலவிடை கொடுத்தல், நா ளைக்குப் பிழைததிருந்தால் பார்ப்போ மென்னல், கொப்புளங் கொண்ட குளிர் வான், பொடியாடி கொன்றதெல்லாம்பொய், முலைமேற் பொறையாகச்சோர்தல், உடம்பைத் தூணோடு சேர்க்குதல், இவைகளும் பிறவும் அகப்பொருளிலக் கணங்

கள். ஒவ்வொன்றும் ஒரு ஒருதுறையாம், அதற்குரிய அலங்கார இலக்கணமும் உண்டு இவற்றைவிசாரித்து இலேசாய் அறிந்து கொள்ளலாம். இவ்விசாரணைக ளால் நற்பயன்படுவோரும் படுவார், கெடுமதிப்படுவோரும் படுவார். இதுபற்றியும், நூல் கெடுமென்றும், இலக்கணம் பாஷை நடைமுதலிய மாத்திரமே முக்கி ய உத்தேசமென்றும், சுத்தவெள்ளை வெளிப்படையாய் விளக்காத பக்ஷத்தில்வி ளக்கவே வேண்டாவென்றும் நிறுத்தினோம். மேலும் வெண்பாக்களில் குறைஞ் சபக்ஷம் ܣ௨ சொல் மிஞ்சின பக்ஷம் ௨ம்-௨௨ சொல் இருக்கும், இடைவாகிய ச்சந்தி இலக்கணங்களை முழுவதும் உதகரிக்க இடமில்லை யாதலாலும், F. A. B. A. மாணுக்கருககு விதிததுள்ள விராடபர்வம் நைஷதம் முதலிய நீண்டவிரு த்தப்பாக்களுக்கே அவை அவசியம் வேணடு மாதலாலும் பெருக்காது நிறுத்தலா யிற்று. Night is over. It is morning now. The sun rises in the next stanza.

CXXVI. வில்லி கணைநெகிழப்ப வெண்மதியஞ் சீரிழப்பத்
தொல்லை யிருளகிழ்ந்த தோன்றினான் - வல்லி
மணமாலை வேட்டிடுதோள் வாளரசர் முன்னே
குணவாயிற் செங்கதிரோன் குன்று.

வில்லி for கருப்புவில்லி ie மன்மதன் ;—கணை = தன்பூ அம்புகளை ;—இழப்ப = to loose ,—வெண்மதியம் = வெள்ளிய நிலாவானது ;—சீர் = தன் சீராகிய குணமாகிய வெண்டன் மையை ததணடனமையை ;—இழப்ப ;—தொல்லை = பழைய primeaval = துன்பமான distressful, painful, vexing ;—இருள ;—nom to கிழிய = to be torne, கெட அகல தொலைய ;—தோன் றினை = உதித்தான் = உதயமானான் = appeared, is or has risen ;—வல்லி for வல்லியி னுடைய ie தமயந்தியின் ;—மணமாலை = கலியாண மாலையை = சுயம்வர மாலையை = Swayam Varam-garland ;—வேட்டிடு = வேட்டிடுகின் ற = வேட்கின்ற=விரும்பியிருக்கிற=that expect or long for ;—தோள் for தோள்கள் =தோள்களை யுடைய ;—வாளரசா முன்னே = in the presence of those swords-holding kings ;—குணவாயில் = குணக்கில்= கிழக்கில் ;—செ ங் கதிரோன்=சூரியன் ;—குன்று=குன்றில்=உதயகிரியில். Prose. மன்மதன் தன் அம்புகளை இழுககவும், வெணமதியானவன் தனது சீரினை (சிறபபை) கைநெ கிழவும, உலகத்தின (தொல்லையின்) இருள் கிழிந்து போகவும் ie கழிந்து போக வும் ஆக, தமயந்தியின் (வல்லியின்) சுயமவரமாலையினை ஆசிக்கும் தோள்களை யுடைய இராசாக்கள் முகத்திலே கிழககில் சூரியனானவன் உதயகிரியில் உதித் தான் எ-று. The wording of this Stanza cannot but remind us of that far nobler Sun of Righteousness, the peculiar incidents of whose Advent are so graphically described, that one is tempted to take our author for a *believer*. How beautiful upon the mountains are the feet of him that bringeth good tidings, that publisheth peace ; that bringeth good tidings of good, that publisheth Salvation ; that saith unto Zion, Thy God reigneth ! **Isaiah.**

*S. Samuel Pillais' Manuscripts.*

